Acc. no-38107

4

# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை


| | |
|---|---|
| கழகத்தின் அகரவரிசைப் பணி | கஉரு |
| புலவர் புகழ்ச் செந்நா | கஉகூ |
| பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து | கஙஉ |
| ஆட்சிமொழித் துணுக்குகள் | கஙரு |
| பிரெஞ்சுத் தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் ழீன் பிலியோசா மறைவு | கஙஅ |
| செங்கணான் யார்? | கசக |
| இலக்கிய விருந்து | கசஎ |
| பெரியபாளையம் சுக்கிரீசுவரர் கோயில் | கருஉ |
| வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளும், தண்டமிழ்க்கவிகளும் | கருஎ |
| திரு. பிரஷ்னேவ் மறைவு | கசா0 |
| திரு. வினோபாபாவே மறைவு | கசாக |
| செய்திகளும் குறிப்புகளும் | கசாஉ |
| மதிப்புரை | கசாங |


சிலம்பு-ருஎ] வள்ளுவர் ஆண்டு-உ0கங, கார்த்திகை Dec. '82 [பரல்-சா

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)


## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

௧. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பிஎச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

௨. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

௩. பேராசிரியர் ச. அகத்தியலிங்கம், தமிழ்த்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

௪. முனைவர் பொன் சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

௫. முனைவர் பொன் கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

௬. முனைவர் கு. பரமசிவம், எம். ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

௭. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

௮. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ.,டிப்.லிங்., பிஎச்.டி
மயிலாடுதுறை.

௯. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

௧0. பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம், தமிழியல்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.


---


## “செந்தமிழ்ச் செல்வி”
## விளம்பரக் கட்டணம்
## ADVERTISEMENT TARIFF

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பககம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 40/- |

---

## “செந்தமிழ்ச் செல்வி”

ஆண்டுக் கையொப்பம் :
உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :
உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00


---

16.12.82

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, கார்த்திகை | பரல் |
|---|---|---|
| ௫௭ | திசம்பர் 1982 | ௪ |

# கழகத்தின் அகரவரிசைப் பணி

(முன்னிதழ் ௮௮ஆம் பக்கத் தொடர்ச்சி)

மொழிப் பயிற்சிக்கு உதவுவது அகராதியாகும். அவ் வகையில் தமிழ்மொழிப் பயிற்சிக்கு இன்றியமையாது உசவும் அகராதிகளை வெளியிடுவதில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் முன்னணியில் உள்ளது. தமிழ்—தமிழ் அகராதிகளையும் ஆங்கிலம்—தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ளதுபோல் கழகம் தமிழ்—ஆங்கில அகராதியையும் வெளியிட்டுள்ளது. 1779 இல் முதன்முதல் பெப்ரீசியசு தமிழ்—ஆங்கில அகராதியை வெளியிட்டார். அதன்பின்னர் ராட்லர், வின்சுலோ போன்ற மேனாட்டறிஞர்கள் தமிழ் ஆங்கில அகராதிகளை வெளியிட்டுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள 'தமிழ் லெக்சிக'னில் தமிழ்ச்சொற்களுக்குரிய ஆங்கிலப் பொருள் தரப்பெற்றுள்ளன. விசுவநாத பிள்ளை அகராதியும் இவ்வகையைச் சாரும்.

தற்போது வழக்கிலுள்ள சொற்களையும் இலக்கியச் சொற்களையும் தொகுத்து, சுருக்கமும் பெருக்கமும் இன்றி இடைப்பட்டதாய்ப் பயனுள்ள தமிழ் ஆங்கில அகராதியைத் தொகுக்கும் பணியைப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் அவர்களிடம் கழகம் ஒப்புவித்தது. தொடக்கத்தில் ஒரு பகுதியை முடித்த நிலையில் உடல்நலங்குன்றியதன் காரணமாக அதனை அவர் முற்றுப்பெறச் செய்யவில்லை. பழந்தமிழ்ச் செய்யுள்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலகுக்கறிமுகம் செய்த திரு. இர. பாலகிருட்டிண முதலியார் அவர்கள் இப் பணியை

முடித்துத் தந்தனர். தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் வழியாகத் 'தமிழ்—ஆங்கில அகராதி' 1976இல் வெளியிடப்பெற்றது. இது தமிழ்மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றது. தமிழ் கற்க வரும் மேனாட்டவருக்கும் பிறமொழியாளர்கட்கும் தமிழ்நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க விரும்புவார்க்கும் இவ்வகராதி பேருதவி புரிகின்றது. அண்மையில் இதன் இரண்டாம் பதிப்பும் வெளிவந்துள்ளது.

சதுரகராதியை முதன்முதல் உருவாக்கிய வீரமாமுனிவர் அதை நான்கு பிரிவுகளாகப் பிரித்தார். பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி என்ற பிரிவுடன் அகராதி உருவாயிற்று. அதில் ஒரு பகுதியான 'தொகையகராதி'யை மிகவும் விரிவுபடுத்தி அச்சில் வந்துள்ள பல்வேறு இலக்கியங்களிலிருந்து அவற்றில் கையாளப்பெற்றுள்ள தொகைச் சொற்களனைத்தையும் அவற்றுக்குரிய விளக்கங்களையும் தொகுத்துக் கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர் இதனை உருவாக்கியுள்ளார்.

எழுத்திலும் பேச்சிலும் இருபொருள் தரக்கூடிய சொற்களைக் கையாண்டு பொருள் சுவைபடப் பேசுவது புலவர்களின் தனிச்சிறப்பாகும். அத்தகைய சொற்களைச் 'சிலேடைச் சொற்கள்' என்று குறிப்பிடுவதுண்டு. தமிழ் இலக்கியங்களில் பயின்று வரும் 'சிலேடைச் சொற்களை' மட்டும் தொகுத்து அவற்றின் இருவகையான பொருள்களையும் விளக்குவது திரு. சு. அ. இராமசாமிப்புலவர் தொகுத்த 'சிலேடையகரவரிசை'யாகும்.

சொற்களின் நேர்பொருளைச் சொல்லுக்குச் சொல்லாகத் தருவது அகராதியின் பண்பு. இவை சொற்பொருள் அகராதி என்ற வகையைச் சார்ந்தனவாகும். அவ்வாறின்றி இலக்கிய இலக்கண நூல்களைப் பயில்வார்க்கு உதவும் பொருட்டே பல்வகை அகராதிகளை மேனாட்டார் தொகுப்பதுண்டு. தமிழிலும் அத்தகைய அகராதிகளை உருவாக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இலக்கணச் சொற்பொருள் அகரவரிசை, சிறப்புப் பெயரகராதி, மேற்கோள் விளக்க அகரவரிசை போன்ற அகரவரிசைகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளது.

ஒரு மொழியின் கட்டுக்கோப்பைக் கட்டிக் காப்பவை இலக்கண விதிகளடங்கிய இலக்கண நூல்களாகும். தமிழ்மொழியின் ஐந்திலக்கண வகைகளையும் விளக்கும் நூல்கள் பல உள்ளன. அவற்றில் அமைந்துள்ள கருத்துகள் பலவற்றையும் அந் நூல்களில் பல்வேறு இடங்களில் கண்டுபிடிப்பது அருஞ்செயலாகும். மேலும் ஒரு குறிப்பிட்ட இலக்கண வகையை விளக்கும் சொல்

னுக்கு இலக்கண நூலின் எந்தப் பகுதியில் பொருள் காண வேண்டுமென்று அறிந்துகொள்வதே கடினம். இத்தகைய இடர்ப்பாடுகளை எளிதில் கடந்து தமிழில் உள்ள இலக்கணச் சொற்களுக்கு அகரவரிசை முறையில் பொருள் தெரிந்துகொள்ள உதவுவது கழக இலக்கியச் செம்மலான புலவர் இரா. இளங் குமரன் அவர்கள் தொகுத்த 'இலக்கணச் சொற்பொருள் அகரவரிசை' யாகும். இதன் முதற்பகுதியாக எழுத்தும் சொல்லும் மட்டும் வெளி வந்துள்ளது. எஞ்சிய பொருள், யாப்பு அணி சார்ந்த இலக்கணச் சொற்களின் பொருளை விளக்கும் பகுதி இனி வெளிவருதல் வேண்டும்.

தமிழ் இலக்கிய நூல்களைப் பயிலும்போது அவற்றில் சமய, புராண, வரலாற்றுச் செய்திகள் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளதைக் காணலாம். அத்தகைய மேற்கோள்களுக்கு உரை யெழுதுவோர் அம் மேற்கோள்களின் உள்ளடங்கிய வரலாற்றுக் கதைப் பகுதிகளை விளக்கிக் காட்டுவர். தமிழ் இலக்கிய நூல்கள் அனைத்துமே உரையுடன் வெளிவந்துள்ளன என்று கூறுதற் கில்லை. மூல நூல் வடிவில் மட்டுமே வெளிவந்துள்ள இலக்கிய நூல்களைப் பயில்வார்க்கும் உரை நூல்களிலும் கதை விளக்கப் பெறாத இடங்களைப் புரிந்துகொள்ள விரும்புவார்க்கும் பயன்படக் கூடிய வகையில் அம் மேற்கோள்களுக்குரிய கதைகளைப் பல்வேறு நூல்களைப் படித்துணர்ந்து அவற்றையும் அகரவரிசை முறையில் தருவதே 'மேற்கோள் விளக்க அகரவரிசை' எனும் நூலாகும். நூற்றுக்கணக்கான இலக்கிய, சமய, புராண நூல்களைத் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் பயின்று பெரும்பாடுபட்டு இவ் வகர வரிசையினை உருவாக்கியுள்ளார்.

சமய, இலக்கிய நூல்களில் பயின்று வரும் சிறப்புப் பெயர் களுக்கு விளக்கமான முறையில் பொருள் எழுதும் பாங்கை மேனாட்டுக் கலைக்களஞ்சியங்களில் காணலாம். அவை சமயம், இலக்கியம் ஆகியவற்றுடன் நின்றுவிடாது அறிவியல், வரலாறு போன்ற பலதுறைச் சொற்களுக்கும் விளக்கம் தரும். தமிழிலும் இத்தகைய கலைக்களஞ்சியப் போக்கான அகராதிகள் இந் நூற் றாண்டின் தொடக்கத்திலேயே தோன்றத் தொடங்கின. அபிதான கோசம், சிறப்புப் பெயரகராதி, அபிதான சிந்தாமணி போன் றவை இவ்வகையைச் சார்ந்தனவே. புராண இதிகாசங்களில் உள்ள சிறப்புப்பெயர்கள் மற்றும் சங்கப் புலவர்கள், அரசர் களின் பெயர்கள், சிவப்பதிகள் முதலான திருக்கோயில்களின் பெயர்கள், நூல்களின் பெயர்கள், வரலாற்றுப் பெயர்கள் இடப் பெயர்கள் முதலான சிறப்புப் பெயர்கள் அனைத்தையும் ஆயிரக்

கணக்கான நூல்களைப் பயின்று தொகுத்து அவற்றை விளக்குவதே 'சிறப்புப் பெயரகராதி' என்பது. இதனை அரும்பாடுபட்டுத் தொகுத்தவர் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் ஆவர்.

முற்கூறியவாறு புதுவகையான அகராதிகள் பலவற்றைத் தொகுத்து வெளியிட்ட கழகம் இவற்றுக்கு அடிப்படையான 'நிகண்டுகளையும்' வெளியிட்டுள்ளது. முற்காலத்தில் இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுப் புலமையடைய விரும்புவோர் முதற்கண் நிகண்டு நூல்களை ஐயந்திரிபறக் கற்க வேண்டும். சொற்களுக்குரிய பல்வேறு பொருள்களைச் செய்யுள் வடிவில் தொகுத்துத் தருவது 'நிகண்டு' ஆகும். பழந்தமிழ்ப் புலவர்கள் நிகண்டுகளை அப்படியே முழுவதும் மனப்பாடம் செய்துவிடுவர். எந்தச் சொல்லுக்குரிய பொருள் கேட்பினும் அப்படியே அதற்குரிய நூற்பாவினை ஒப்புவித்துவிடுவர். இந்த ஆற்றல் அவர்கட்கு எதுகைமோனை நயத்துடன் எளிதில் பாட்டியற்றத் துணை நின்றது. மேலைநாட்டு முறையில் அகராதிகள் தோன்றியபின் நம் நாட்டு நிகண்டுகள் வழக்கொழிந்தன. நூற்பாக்களை மனப்பாடம் செய்வதைவிட விளங்காத சொல்லை அகராதியில் பார்த்து மிகவிரைவில் பொருள் தெரிந்துகொள்வது எளிய செயலாயிற்றே! தமிழில் பயனுடைய பல நிகண்டுகள் தோன்றின. எனினும் இன்று நிலைபெற்று மக்களிடையே வழக்கில் நிற்பன ஒரு சிலவே. சூடாமணி நிகண்டு, பிங்கல நிகண்டு, திவாகர நிகண்டு போன்றவை இன்னும் பலரால் பயிலப்பெறுகின்றன. இவற்றின் சிறப்பைக் கருதி, சில நிகண்டுகளை மட்டும் கழகம் பதிப்பித்துள்ளது. பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, திவாகரர் இயற்றிய 'சேந்தன் திவாகரம்,' காங்கேயர் அருளிய 'உரிச்சொல் நிகண்டு' ஆகியவற்றைத் தக்க புலவர்களைக் கொண்டு கழகம் செம்மையான முறையில் பதிப்பித்துள்ளது.

ஒருவர் மொழிவளத்தைப் பெருக்கிக்கொள்ள மிக இன்றியமையாது தேவைப்படுபவை அகராதிகள் ஆகும். இலக்கிய இலக்கணம் பயில்வார்க்கு ஐயம் எழுகின்ற இடங்களில் அதனைக் களைவதற்குத் துணையாய் நிற்பவையும் அவையே. எனவே அறிஞர் பெருமக்களுக்கு ஏற்றவகையில் தேவையான அகராதிகளைக் காலத்திற் கேற்றவாறு கழகம் வெளியிட்டுப் பெரும்பணியாற்றியுள்ள தெனலாம்.

———

# புலவர் புகழ்ச் செந்நா

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

புலவர் நா புகழ் நா; அது செவ்விய நா; மறந்தும் பிறன் கேடு சூழாத நா; உலக நலங்கருதி உரைக்கும் உயர் நா; உருகி உருகி நிற்கும் உள்ளத்தின் ஊற்றுக் கண்ணுக்கு உருக் கொடுத்து உயர்ந்தோங்கும் நா! அந் நா, பேரருட் பெருக்கத்தின் உறைவான நெஞ்சத்தின் வழிப்பட்டதாகலின், மொழித் திறம் சிறந்து, "கூறத்தக்கன இன்ன, கூறத் தகாதன இன்ன, கூறும் பான்மை இன்ன" என்பனவெல்லாம் உணர்ந்து சொல்லும் நன்னெறிப்பட்டதாகும்.

முழுமுதல் இலக்கண நூலாசிரியராகிய தொல்காப்பியனர் தனி நாகரிகச் செந் நாவினர். அவர் சில எழுத்துகளை விரித் தோதுங்கால் அவற்றின் பெயரையும் வெளிப்படக் கூற விரும் பாராய்க் குறிப்பால் உரைத்துளார். அத்தகைய எழுத்துகளை "உப்பகாரம்" (உகரத்தோடு கூடிய பகரம்; என்றது 'பு'); "உச்சகாரம்" (உகரத்தோடு கூடிய சகரம்; என்றது 'சு'); "பவ்வீ" (ஈகாரத்தோடு கூடிய பகரம்; என்றது 'பீ'); என்கிருர். சிறு நீர் என்று நாம் வழங்குவதை அவ்வாறே கூற விரும்பாத புலமை யாளர்களாகிய உரையாசிரியர்கள் 'நீரல் நீர்' என்றும், அதன் ஈரப்பதத்தை 'நீரல் ஈரம்' என்றும் குறித்தனர்.

வழக்குகளில் 'மங்கல வழக்கு' என ஒன்றை இலக்கணம் வல்லார் போற்றினர். அது மங்கலம் இல்லாததை மங்கலமாகக் கூறும் சிறப்புடையதாகும்.

"செத்தாரைத் துஞ்சினுர் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும், காராட்டை வெள்ளாடு என்றும், சுடுகாட்டை நன்காடு என்றும், தீய பாம்பை நல்ல பாம்பு என்றும் வழங்கும் இவை போல்வன மங்கலம்" என்று எடுத்துக் காட்டுத் தந்து இலக்கண உரையாசிரியர்கள் விளக்குவர்.

இலக்கிய ஆசிரியர்களோ தாம் எடுத்துக்கொண்ட காவிய மாந்தர்களின் நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்தே நயம்பெறக் காட்டி அமைவர்.

காப்பிய முதல்வராகிய இளங்கோவடிகளார் தம் காவியத்தின் நாயகன் கோவலன், காவலன் ஆணையால் வெட்டுண்டு இறந்த

செய்தியைக் கூற வருகிருர். நிகழ்ந்ததை நிகழ்ந்தவாறே கூருமல் வெட்டுதல், உடல் துண்டாதல், இறத்தல் ஆகிய வற்றை மறைத்துக் "காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்" என்று அமைகின்ருர். கண்ணகியார் காவலனைக் கண்டு வழக்குரைக்க, உண்மையுணர்ந்த பாண்டியன் அரியணையில் இருந்து வீழ்ந்து இறந்தான்; அவனைத் தழுவிக் கொண்டே கோப்பெருந்தேவியும் ஆருயிர் விடுத்தார். இச் செய்தியையும் இளங்கோவடிகள் நா,

"மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகஎன் ஆயுளென
மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே; தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்
றிணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி'

என நயம் பெற உரைக்கின்றது. 'மயங்கி வீழ்தல்,' 'தொழுது வீழ்தல்' என்பவற்ருல் குறிப்பாய் அறிய வைத்து நிகழ்ச்சியை உணர்த்தி விடுகிருர்.

இனிச் சேக்கிழார் நா நயம் நனி சிறப்புடையதாம். சிவ நெறிச் சீர்மையில் அழுந்திய அவர் உள்ளம் செவ்விதின் வெளிப் பட அவர் தம் வாக்குகள் மிளிர்கின்றன,

மெய்ப்பொருள் நாயனுரைக் கொல்லக் கருதி முத்த நாதன் செல்கின்ருன். அதனைச் சொல்லக் கருதுகிருர் சேக்கிழார்; சொல்லத் தயங்குகிருர்; அவன் செல்லும் நிலைமையைச் "செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான்" என்கிருர். 'செப்ப அரு நிலைமை' என்பது யாது? "எம்மால் சொல்லு தற்கு—அதன் கொடுமையை நினைந்து உருகிப் போம் யாம் சொல்லுதற்கு—அரிய நிலைமை" என்று சொல்லாமல் சொல்லாடு கிருர்.

முத்தநாதன் தவிசின் மேல் அமர்ந்தான்; மெய்ப்பொருளார் நிலத்து அமர்ந்தார்; அவர்க்கு மறைநூல் ஓதுதற்குச் சுவடி அவிழ்ப்பான் போல் உடைவாளை எடுத்துக் குத்தினுன். குத்தினுன் அல்லது வெட்டினுன் என்னும சொல்லைத் தம் வாயால் கூறவும் மனங் கொள்ளாத சேக்கிழார்,

"பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய"

என்ருர். (பத்திரம் - வாள்; நினைந்த அப்பரிசு - நினைந்த அவ் விதமே) இவ்வாறே ஏனதி நாத நாயனுரொடு மாறுபட்டு நின்ற

அதிசூரன் அவரைக் களத்தில் வாளால் வெட்டினான். அதனை அவ்வாறே கூறல் சாலாது எனக் கொண்ட சேக்கிழார்,

"முன்னின்ற பாதகனும் தன்கருத்தே முற்று வித்தான்"

என்ற அளவில் அமைந்தார்.

இனிக் கம்பர் போற்றும் நாகரிக உரைகள் எண்ணற்றன. அவற்றுள் ஒன்றை மட்டும் காண்போம்; மந்தரையின் தூண்டலால் கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்ப உறுதி கொண்டாள்; வெறு நிலத்து உருண்டாள்; இராமன் முடி சூட்டுச் செய்தியை உரைப்பதற்காக அவள் மாளிகையை நாடி வந்த தயரதன் மருண்டான்; மயங்கினான்; "தேனே, மானே" என்று தேற்றினான். அவள், அவன் எதிர்பார்த்திராத செய்தியை—இராமன் காடாளவும், பரதன் நாடாளவும் ஆன செய்தியை—உரைத்தாள். "வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான்;" "ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான்"; அரசர்கள் மணிமுடிகள் எல்லாம் தன் அடிகளில் கிடக்கக் கண்டு களித்த வேந்தன், கவலைக் கடலில் ஆழ்ந்து தேறிக் கைகேயியினிடம் வரம் வேண்டிக் கிடக்கிறான். "உன் மகனுக்கு நாட்டைத் தருவேன்" என உறுதி மொழிந்தான். ஆனால் இராமனைக் காட்டுக்கு விடுத்தல் மட்டும் வேண்டாவாம்!

'இராமனைக் காட்டுக்கு அனுப்பாதே' என்று சொல்ல வாய் வரவில்லை. "என் கண் வேண்டுமா? அதைத் தருதற்குக் கடமைப்பட்டவன் நான்; உயிர் வேண்டுமா? உடனே தருவேன்; பெண்ணிற் சிறந்தவளே, கேகயன் மகளே, மண்ணுலகையெல்லாம் கொள்க; ஆனால் மற்றது ஒன்றை மட்டும் மறந்துவிடு" என்று கெஞ்சுகின்றான். இதனைக் கம்பர்,

"கண்ணே வேண்டும் என்னினும் ஈயக் கடவேன்என்
உண்ணேர் ஆவி வேண்டினும் இன்னே யுனதன்றோ
பெண்ணே வண்மைக் கைகயன் மானே பெறுவாயேல்
மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மறவென்றான்.

என்கிறார்.

மண்ணே கொள் நீ என்று கூறியவர் இராமன் காடு செல்லுதலைக் கூறவும் பொறாராய் 'மற்றையது ஒன்றும் மற' என்பது எத்துணை நயமிக்கது! தயரதக் கம்பன் தகுதி பளிச்சிடும் சொல் நாகரிகம் இதுவாகும்.

பண்டை நூலாசிரியர் போலவே உரையாசிரியர்களும் சொல் நாகரிகராக இலங்கினர். நூலாசிரியர் குறிப்புகளையெல்லாம்

நன்கறிந்து நயந்து திளைத்தனர்; பயில்வார்க்கும் எடுத்துக் காட்டினர். புறநானூற்றின் 34ஆம் பாடலில் வரும்,

> "ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
> மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
> குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்"

என்னும் பகுதிக்கு விளக்கம் எழுதும் பழைய உரையாசிரியர், "கோவதை முதலாயின வாக்காற்சொல்லவும் படாமையின் ஆன்முலை யறுத்தல் எனவும், மகளிர் கருச் சிதைத்தல் எனவும், குரவர்த் தப்பிய எனவும் மறைத்துக் கூறப்பட்டன" என்று குறிப்பு எழுதுவது அவரது புகழ்ச் செந் நாச் சீர்மைக்குச் சான்றாகும்.

சொல்லுவார்க்கும் கேட்பார்க்கும் நறுமணம் பரப்புவதாக அமைந்த நயத்தக்க நாகரிகச் சொற்களைக் கூறுவதே புலவர் புகழ்ச் செந் நா வியல்பு என்பது இங்குச் சான்றுகளால் சுட்டப் பெற்றது. இதனைப் போற்றி ஒழுகுதல் பொதுவில் புலமையாளர் கடமையாம்! இந்நாளில் புனை கதை எழுதுவார் பலர் தம் நெஞ்சில் இத்தகைய நயநாகரிகத்திற்குத் துளியளவு இடந்தந் தேனும் எழுதுகின்றனரா? பச்சை பச்சையாய் எழுதி இளையர் உள்ளங்களைக் கெடுக்கும் இவ் விழிவாளர் செய்கையைப் புலமையாளர்கள் தடுத்து நிறுத்தி வளரும் இளமையைக் காத்தல் தீராக் கடமையாம்.

---

## இலங்கைத் தமிழறிஞர் கலாநிதி கைலாசபதி மறைவு

இலங்கைத் தமிழ் அறிஞரும், பன்மொழிப் புலவரும், சிறந்த எழுத்தாளருமான கலாநிதி (டாக்டர்) கைலாசபதி அவர்கள் 6—12—82ல் இலங்கையில் தமது 49ஆம் அகவையில் மாரடைப்பால் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

டாக்டர் கைலாசபதி அவர்கள் தமிழரின் வீரத்தை விளக்கும் இலக்கியமான ஹீராய்க் பொயட்ரி (Heroic Poetry)யை எழுதி டாக்டர் பட்டம் பெற்றவர். இவர் சிறந்த எழுத்தாளர். இலங்கையின் நாளேடான 'தினகரன்' இதழாசிரியராக 1957 முதல் 1961 வரை பணியாற்றியுள்ளார். இரு மகாகவிஞன், இலக்கியமும் திறனாய்வும் இன்னபிற நூல்களை எழுதியுள்ளார். மேனாடுகளிலும், கீழை நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்துள்ளார். வடமொழி, கிரேக்கம், சப்பான் ஆகிய மொழிகளிலும் வல்லவர். மறைந்த இப் பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பாண்டித்துரைத் தேவர் பாடிய
# காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன்னிதழ், ககூ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பாண்டித்துரைத் தேவரின் பதினொன்ருவது காவடிச் சிந்துப் பாடல் 'பரத்தை பாற் செல்லலுற்ற தலைவனொடு தலைவி புலந்து கூறியது' என்ற தலைப்பில் அமைந்துள்ளது. சிவஞானபுரத்தில் கோயில் கொண்டிருக்கும் சீலனும் அநுகூலன் வடிவேலன்— பிறவிப் பிணியைப் போக்கும் அதீதன்—உயர் போதன்—வள்ளி நாதனிடம் தலைவி ஒரு குறையைக் காண்கிருள். அவனுக் கென்னவோ அவளுக்கொன்றும் தெரியாதென்ற நினைப்பு.

அந்தத்

தெரிவைமீது வைத்த பரிவெலா மெனக்குத்
தெரிந்ததே நன்ருய்த் தெரிந்ததே

என்கிருள் தலைவி. பரத்தையை நாடிச் செல்லும் தலைவனை,

வேறு

தோகையார் தன்னிடம் மோகமாகியதும் தொன்மையோ
என்ன நன்மையோ

என்ற கேள்விக் கணை தொடுக்கும் தலைவி தலைவனை விளிக்குங் கால 'துங்கன்' என்றும் 'அகளங்கன்' என்றும் 'ஏழை பங்க' னென்றும் சொல்லி, தலைவனுடைய மாறுபட்ட நடத்தையைச் சுட்டிக் காட்டுகிருள் போலும்! "செல்லக் கூடாத இடத்துக்குச் செல்லும் சாகசம்தான் என்ன? சூதும் என்னவோ? ஏரகத்தும் நினைவோரகத்தும் உறையும் ஈசனுக்கிது அடுக்குமா? ஒளி மயமானவன், உம்பரும் நம்பும் நேசனுக்கிது தகுமா?" என்றெல்லாம் தலைவி கேட்கிருள். வழியலா வழியிற் சென்று விலைமாதர் மயக்க மருந்திற் சிக்கிக்கொள்ளச் செய்யும் 'தகடுதத்தம்' என்னவென்றும் தலைவி வினவுகிருள். 'மாலைதனில் வந்து வீதிதனில் நின்று வார்குழல் கோதும் சந்தை மாதரிடத்துச் சிந்தை வைத்த விந்தை என்ன' என்றும் தலைவி வினவுகிருள். சந்தை மகளிரிடம் சொந்தம் கொண்டாட முடியுமா? கடிமணம் செய்து கொள்ளப் பெண்களுக்கென்ன பஞ்சமா? தலைவன் நாள் தோறும் நாடிச் செல்லும் வரைவின்மகளிர் தம்மையும் தம் அழகையும் மதிப்பவர். மீனையொத்த அம் மின் விழியார் தூண்டில் கொண்டு கெண்டைமீனைப் பிடிப்பதைப்போல் தம்மை நாடி வருபவரைக் கண்டு அவர் பொருள் கொண்டு பண்டு செய்த

வினையெனப் பின்னர் அவர் நோவுமாறு செய்வதில் வல்லவ ரன்றோ! இருமனப்பெண்டிர் பின் செல்வதா? அவரோ அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார். 'பரத்த! நண்ணேன் நின் மார்பு' என்று சொல்லாவிடினும் முறை தவறிச் செல்வது நல்லதல்ல என்று தலைவி தலைவனுக்குரைக்கிறாள். எவர் சூழ்ச்சியாயினும் தலைவி முன் வஞ்சகத்தை நெஞ்சகத்து வைத்தல் மாண்பல்லவே.

சேவலைத்துவச மாவுயர்த்தியருள் சீலனே
அனுகூலனே வடி வேலனே—செழும்
தேனுலாவுசிவ ஞானமாபுரி கொள்
சேயனே அப்ரமேயனே.

தீவினைப் பிறவி வீவுறச்செய்யும நீதனே
உயர்போதனே வள்ளி நாதனே—அந்தத்
தெரிவைமீது வைத்த பரிவெலாமெனக்குத்
தெரிந்ததே நன்றாய்த் தெரிந்ததே.

சூர்குலத்தையற வேரறுக்கவரு துங்கனே
அகளங்கனே யேழை பங்கனே—வேறு
தோகையாள்தன்னிடம் மோகமாகியதும் தொன்மையோ
என்ன நன்மையோ.

ஏரகத்தமர்வினை வேரகத்துமுறை ஈசனே
உம்பர்நேசனே சுபர காசனே—அங்கே
ஏகவெவ்வணணஞ் சாகசஞ் செய்குவதேதய்யா
என்ன சூதய்யா.

கொம்மை வெம்முலையாள் கைம்மருங்கிற் சிக்கிக்கொள்ளவோ
என்னையெள்ளவோ விட்டுத் தள்ளவோ—இந்தக்
கோலங்கொண்டுபல ஜாலஞ்செய்து பொய்யே கூறினீர்
வழி மாறினீர்

தம்மையே மதிக்கும் அம்மடந்தையென்ன தஞ்சமோ
பெண்கள் பஞ்சமோ யார்செய் வஞ்சமோ—ஐயோ,
சந்தை வந்தவரைச் சொந்தமென்று கொண்டுசார்கிறீர்
நாளும் சேர்கிறீர்

வேளைதப்பிடாதன் னுளிடத்திலேக வேணுமோ
மனங் கோணுமோ கோபங் காணுமோ—ஆசை
மீறிஞலுமுறை மாறியேசெல்வது மேன்மையோ
நல்ல பான்மையோ.

வாளையொத்தவிழி யாளிடத்தவர்கு மாரனே
மாயூரனே கடம் பாரனே—என்முன்
வஞ்சகத்தைமிக நெஞ்சகத்துவைத்தல் மாட்சியோ
எவர் சூட்சியோ.

(தொடரும்)

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை
மகாகவி பாரதி நகர், சென்னை-600 039.]

## 12. OUTRIGHT SALE

ஆட்சிமொழியின் வளர்ச்சியில் ஆர்வமுடைய நண்பர் ஒருவர் என்னுடன் உரையாடிக்கொண்டு வந்தார். ஒரு சில ஆங்கிலச் சொற்களுக்கு உரிய மொழிபெயர்ப்புகளை அறிய அவர் அவாவினார். "ஐயா, Royalty என்றால் என்ன" என்று கேட்டார். நான் சிறிதும் தயங்காமல் "உரிமை ஊதியம்" என்றேன். அடுத்து, "Hire Purchase என்பதை நாம் எவ்வாறு மொழி பெயர்க்கின்றோம்" என்று வினவினார். "தவணைக் கொள்முதல்" என்று சிறிதும் தடையின்றி விடையிறுத்தேன். கடைசியாக ஒன்று கேட்டார். கேட்டார் என்பதைவிட அதிர்ச்சியை உண்டாக்கினார் என்றுதான் சொல்ல வேண்டும். ஆம், அந்தக் கேள்விதான் "Outright Purchase என்றால் என்ன" என்பதாகும். சிறிது நேரம் வாய் வாளாது நின்றேன். அதன் பின்னர் "முழுவிலை விற்பனை" என்று சொல்லலாமே என்று குறிப்பிட்டேன்.

படிப்பிற்கும், முயற்சிக்கும், சிந்தனைக்கும் வேலை கொடுத்து விட்டார் நண்பர்.

Outright என்னும் சொல் உடனடியான, முழுநிறைவான, ஒரே சமயத்திலான என்னும் பொருள்களைத் தரும். Outright Sale என்பதற்குப் பதிலாகச் சில சமயங்களில் downright sale என்று சொல்வதுண்டு. 'கையிலே காசு வாயிலே தோசை" என்றுகூடச் சொல்வார்கள். இவ்வாறு சொல்லும்போது, "உடனடியான" என்னும் கருத்து தெளிவாகத் தோன்றுவதைக் காணலாம். வீட்டு வசதி வாரியத்தில் Hire Purchase என்னும் தொடரும் Outright Purchase என்னும் தொடரும் அடிக்கடி பயன்படுத்தப்பெறுகின்றன. Outright Purchase என்பது உடனடியான, அப்போதே முழுத் தொகையைச் செலுத்திப் பெறும், வாங்குகையைக் குறிக்கின்றது.

Right, Right என்று சொல்லும்போது ஏற்படும் ஒலியுடன் Outright என்று சொல்லும்போதான ஒலி ஒற்றுமையுடையது போல் தோன்றுகின்றது! எல்லாம் சரிவர அமைந்துவிட்டால் அது Outright தானே!

"அறவிலை வணிகன்" என்னும் அரிய தொடர் நினைவிற்கு வந்தது. "விலை கொடுத்து வாங்குதல்" என்னும் கருத்து,

நெஞ்சில் நிழலாடிக்கொண்டிருந்த காரணத்தால், இந்தத் தொடர் மனத்திரையில் பளிச்சிட்டது.

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே."

இந்தப் பிறப்பில் செய்த ஒன்று மறு பிறப்பிற்கு உதவும் என்று ஆய் அண்டிரன் அறம் செய்பவில்லை. ஆனால் ஆன்றோர் சென்ற வழி அதுவெனக் கண்டு அந்த நற்செயகையிலே அவன் ஈடுபட்டான்.

"அறவிலை வணிகன்" என்னும் அரிய தொடர் Outright sale என்னும் தொடருக்கு வழிகாட்டி உதவும் என்னும் எண்ணம் எனக்கு ஏற்பட்டது.

இந்தச் செய்தி குறித்து, என்னுடைய உடன் ஊழியர், ஆட்சிமொழி ஆணைய உறுப்பினர், திருமிகு எஸ். எஸ். இராமசாமி அவர்களோடு கலந்துரையாடினேன். இவர் ஓர் இலக்கிய வித்தகர். அமைதியான முறையில் அருந்தொண்டு ஆற்றி வருபவர். ஆய் அண்டிரன் செய்துள்ள அரிய உதவிக்கு இணையான அரிய உதவியை இவர் எனக்குச் செய்து கொடுத்தார். பொருத்தமான, பொன் போன்ற இலக்கியக் குறிப்பு ஒன்றைக் கொடுத்தருளினர்.

அதன் பின்னர் திருவாய்மொழியின் பக்கங்களை நான் திரும்பத் திரும்பப் படித்தேன். தித்திக்கும் திருவாய் மொழியிலிருந்து ஒரு பாட்டினை நாம் சேர்ந்து படிக்கலாமே!

தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத்
தந்த பேருதவிக் கைம்மாறா
தோள்களை ஆரத் தழுவிஎன் உயிரை
அறவிலை செய்தனன் சோதீ!
தோள்கள் ஆயிரத்தாய்! முடிகள் ஆயிரத்தாய்!
துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய்!
தாள்கள் ஆயிரத்தாய்! பேர்கள் ஆயிரத்தாய்
தமியனேன் பெரிய அப்பனே!

"சோதீ! பலபல தோள்களையுடையவனே! பலபல திருவடிகளையுடையவனே! இணைந்திருக்கின்ற மலர்போன்ற பலபல திருக்கண்களையுடையவனே! பலபல திருவடிகளையுடையவனே! ஆயிரம் திருப்பெயர்களையுடையவனே! தமியேனுக்குப் பெரிய அப்பனாக இருப்பவனே! மேலும் மேலும் சிறப்பு மிகும்படியாக உனது திருவடிகளை எனக்கே கொடுத்த

பேருதவிக்குக் கைம்மாருகத் தோள்களை நன்ருகத் தழுவிக் கொண்டு என் உயிரை உனக்கே அறவிலை செய்தேன்.''

என்கிருர் நம்மாழ்வார்.

தம் தலைமகனுக்குத் தம் உயிரையே அறவிலை செய்துவிட்ட தாக அறிவிக்கின்ருர் நம்மாழ்வார். அற்றுப் போகும்படியாக விற்பனை செய்துவிட்டாராம். உடனடியாக, முழுநிறைவாக, ஒரே சமயத்தில் விற்பனை செய்துவிட்டாராம்.

ஆம், 'அறவிலை''. ''கண்டு கொண்டேன், கண்டு கொண் டேன்'' என்று களிதுளும்பினேன். வினவிய நண்பர்களெல் லாம் வியப்பில் ஆழ்ந்து மகிழ்ந்தனர், மெய்மறந்தனர், தேனில் விழுந்த வண்டாயினர்!

Outright sale என்பது, இன்று வந்த எழில் நிலாவாகும். ஆனல் ''அறவிலை'' என்பது அன்றே நம் ஆன்ருேர் வகுத்துக் காட்டிய அழகிய நிலாவாகும்.

Outright sale = அற விலை.

---

## மறைமலையடிகளார் நூல்நிலையத்திற்கு திரு. எம். ஏஎல். அழகப்ப செட்டியார் அவர்களின் நன்கொடை ரூ. 2500/-

பெங்களூரில் பெருவணிகராகவும் 'சாமுண்டி சில்க் மில்' உரிமை யாளராகவுமிருந்து மறைந்த திரு. எம். ஏஎல். அழகப்ப செட்டியார் அவர்கள் சென்னை மறைமலையடிகளார் நூல்நிலைய வளர்ச்சிக்கென ரூ. 2500/- நன்கொடையாக அளித்துள்ள செய்தியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிருேம்.

கல்வி வளர்ச்சியில் பேரார்வம் கொண்டிருந்த திரு எம். ஏஎல். அவர்கள் செட்டி நாட்டைச் சேர்ந்த பெருமகனுராவர். இவரது சொந்த ஊரான கோட்டையூரில் இவர்தம் அறக்கட்டளை மூலம் முத்தையா அழகப்பா மேனிலைப் பள்ளி சிறப்பாக நடந்து வருகிறது.

பெருஞ் செல்வரான இவர் ஒருமுறை மறைமலையடிகளார் நூல் நிலையத்தைப் பார்வையிட வந்தபோது, நூலகத்தின் வளர்ச்சிக்கு நன்கொடை தருவதாக வாக்களித்துச் சென்ருர். தமது இறுதிக் காலத் தில் தம் மைந்தர் அண்ணாமலையாரை அழைத்துத் தாம் வாக்களித்த படி ரூ. 2500/-ஐ மறைமலையடிகளார் நூலகத்திற்கு அனுப்பும்படி பணித்தார். அதற்கிசைய மைந்தரும் தந்தையிட்ட ஆணைப்படி அத் தொகையினை நூலகத்திற்கு வழங்கியுள்ளார். அவர்கட்கு நூலகத்தின் நன்றி என்றும் உரியது. இத்தகைய தந்தையாரையும் மைந்தரையும் நினைக்கும்போது, 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்னும் புறநானூற்றுப் பாடல் நினைவுக்கு வருகின்றது. வாழ்க அழகப்பரின் வள்ளல் பண்பு! வளர்க அண்ணாமலையாரின் அருளுள்ளம்.

—நூலகர்

# பிரெஞ்சுத் தமிழ்ப் பேரறிஞர் டாக்டர். ழீன் பிலியோசா மறைவு

தமிழ் ஆராய்ச்சி உலகளவில் நடைபெற 'உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்' தோன்றவும் அதன் வழி உலகத் தமிழ் மாநாடுகள் நடைபெறவும் முதற் காரணராயிருந்த தவத்திரு. தனி நாயக அடிகளார், திரு. ஏ. சுப்பையா ஆகியோருக்கு உறு துணையாய்த் திகழ்ந்தவர் பிரெஞ் சுத் தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் ழீன் பிலியோசா. அத்தகைய பேரறிஞர் அண்மையில் தமது 76ஆம் அக வையில் மறைவுற்ருர் எனும் செய்தியறிந்து வருந்துகிரும். இஃது உலகளாவிய தமிழாய்விற் குப் பேரிழப்பாகும்.



புதுவைமா நகரில் 'புதுவை இந்திய இயல் ஆய்வு மன்றம்' அமைவதற்கும் அதன்வழி பல்வேறு சிறப்புப் பணிகள் நடை பெறுவதற்கும் காரணராயிருந்தவர் டாக்டர் பிலியோசா. இவர் திருமுருகாற்றுப்படை, திருவிளையாடல், பரிபாடல் முதலிய வற்றைப் பிரெஞ்சு மொழியில் வெளியிட்டுள்ளதுடன் சைவ ஆகமங்களைத் தேடிக் கண்டுபிடித்துப் பிரெஞ்சு ஆக்கம் செய்து வெளியிட்டுள்ளார். தமிழ்நாட்டுக் கோயில்கள்—அவற்றிலுள்ள சிலைகள், நகைகள் முதலியவற்றைப் படமெடுத்துத் தொகுக்க ஏற்பாடு செய்துள்ளார்—பாரிசு மாநகரில் மூன்ரும் உலகத் தமிழ் மாநாடு நடைபெறுதற்குக் காரணராயிருந்தவர் இவரே. சித்த வைத்தியத்திலும் பேரீடுபாடு கொண்டிருந்தார். இத்தகைய அறிஞரின் இழப்பு ஈடுசெய்ய முடியாததாகும்.

**வரலாறு**

பேராசிரியர் ழீன் பிலியோசா அவர்கள் 1906ஆம் ஆண்டில் பாரிஸ் மாநகரில் பிறந்தார். தமது குடும்ப மரபுப்படி மருத்துவக் கலையினைப் பயின்ருர். அதே நேரத்தில் இந்திய மொழிகளையும் பயின்று வந்தார். இவர் கண் மருத்துவத்தில் ஓரக்கண் பார்வை பற்றிய ஆய்வினைச் செய்து அதில் முனைவர் பட்டம் பெற்ருர்.

பின்னர் அஃது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு இன்றளவும் தனிச் சிறப்புப் பெற்றுத் திகழ்கிறது. இவர் இந்திய மருத்துவம் பற்றியும் ஆராய்ந்துள்ளார்.

இந்திய மொழிகளை ஆராய விரும்பிய இவர் சில்வயின் லெவி (Sylvain Levy) என்பவர்மூலம் சமக்கிருதத்தையும், ஜூல்ஸ் பிளாக் (Jules Bloch) என்பவர்மூலம் தமிழையும் கற்கலானார். அப்போது பேராசிரியர் எட் லாமோட் (Prof. Et. Lamotte), பேராசிரியர் லூயி ரேனு (Prof. Louis Renou) ஆகியோரின் நட்பினையும் பெற்றார். திபேத்திய மொழியினையும், இந்திய மொழிகளையும் பயின்றார். கையெழுத்துப் படிகளை ஆர்வத்தோடு பயின்றார்.

இவர் எழுதிய நூலின் தலைப்பினைக் கொண்டே இவரது ஆராய்ச்சித் திறனை அறிந்துகொள்ளலாம். இவர் பேய், பிசாசுகள்பற்றியும் நூல் எழுதியுள்ளார். இந்திய, திபேத்திய, சீன, கம்போடிய மற்றும் அராபிய மொழிகளிலுள்ள மூல நூல்களினின்று தமது ஆராய்ச்சிக்குரிய செய்திகளை எடுத்துக் கொண்டார்.

இவர் கண் மருத்துவராக மட்டுமின்றிக் கீழ்த்திசைக் கலைகளை ஆராய்வதிலும் ஈடுபட்டார். அவ்வப்போது பாரிசிலுள்ள தேசிய நூலகத்தோடு தொடர்பு கொண்டார். சமக்கிருத கைப்படிகளைப்பற்றியதொரு பட்டியலை வெளியிட்டார். 1941இல் இந்திய மேல் பட்டப்படிப்புக்குரிய நிலையத்தில் பேராசிரியரானார். இந்திய மருத்துவம்பற்றி இவர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைக்காக முனைவர் பட்டம் (Doctor of Letters) 1949ல் இவருக்கு வழங்கப்பட்டது. இவ்வாராய்ச்சி நூல் 1964ல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. பேராசிரியர் ரினோவ் (Prof. Renou) அவர்களுடன் இணைந்து இந்தியக் கலைகள்பற்றிய (Manual of Indian Studies) ஆராய்ச்சித் தொகுப்பினை வெளியிட்டார்.

1952ல் பிரெஞ்சுக் கல்லூரியில் இந்திய இலக்கியம் மொழியியல் துறைகளின் தலைமைப் பதவியை ஏற்றார். 1955ல் இவர் புதுச்சேரியில் பிரெஞ்சு மொழி நிறுவனத்தை ஏற்படுத்தினார். தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சிக்கு இதன்வழி வித்திட்டார். 1977ல் ஓய்வு பெறும் வரையில் ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டிருந்தார். இந்தியா முதல் தூரக் கிழக்கு நாடுகள் வரையில் பல பதவிகளை ஏற்றிருந்த இவர் அறிவியல் ஆராய்ச்சிகளையும் தொடர்ந்து செய்து வந்தார். 1969ல் தென் கிழக்கு ஆசிய நாடுகளின் நாகரிகம்பற்றி ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையினை

எழுதினர். நீண்ட காலம் புதுச்சேரியிலேயே தங்கியிருந்த இவர் சிறந்த தமிழ்ப்புலவர்களை ஒன்று கூட்டினர்.

1966ல் கல்வெட்டாராய்ச்சிக் கழகத்தின் உறுப்பினரானர். அத்துடன் அனைத்து நாட்டுத் தமிழ், சமக்கிருத ஆராய்ச்சிக் குழுவிலும் இடம் பெற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தககது.

இறுதியாக இவர் வெளியிட்ட நூல்கள் யோக சாத்திரம் பற்றியதாகும். இந்தியா, தூரக்கிழக்கு நாடுகள்பற்றிப் பிளினி எழுதிய நூல், தென்னிந்திய உயிரின வரலாறு, கம்போடியாவின் தேவராஜ தத்துவம் ஆகியனபற்றிய ஆராய்ச்சி நூல்கள் இவர்தம் பல்துறை ஆராய்ச்சி அறிவினையும், தம் மாணவர்களை இத்துறை ஆராய்ச்சிகளில் இவர் இயக்கி வந்தமையும் புலப்படுத்துகின்றன.

---

## நடிகர் தி. க. பகவதி மறைவு

டி. கே. எஸ். உடன் பிறப்பாளருள் நான்காமவரும், பழம் பெரும் நாடகக் கலைஞரும், திரைப்பட நடிகருமான திரு. தி. க. பகவதி அவர்கள் 1—12—82ல் தமது 66ஆவது அகவையில், சென்னை இராயப்பேட்டை மருத்துவமனையில் காலமானர்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறேம்.

திரு பகவதி அவர்கள் 1936 ஆம் ஆண்டில் திரு. இராசா சாண்டோ இயக்கிய 'மேனகா' என்னும் திரைப் படத்தின்மூலம் கலையுலகிற்கு அறிமுகமானர். அடுத்து சம்பூரண இராமாயணத்தில் இராவணனுக நடித்துப் புகழ் பெற்றர். பின்னர் 'ரத்த பாசம்' படத்தின் மூலம் இவருக்குத் திரைப்பட உலகில் நிலையான இடம் கிடைத்தது. நூறு படங்கட்கு மேல் நடித்துள்ளார். 'ஆறிலிருந்து அறுபது வரை' என்னும் திரைப்படமே இவர் கடைசியாக நடித்த படம். மற்றும் டி. கே. எஸ். நாடகங்களான மனிதன், ஔவையார், இராஜராஜ சோழன், குமஸ்தாவின் பெண் ஆகிய நாடகங்கள் மூலம் தமிழுக்கும், கலை உலகிற்கும் இவர் ஆற்றிய தொண்டுகள் மிகப்பல.

இவர் தமிழரசுக் கழகத்தில் ஈடுபாடு கொண்டவர். அங்ஙனமே இவரும், இவர்தம் தனயனர் தி. க. சண்முகம் அவர்களும் நம் கழகத்திடமும் கழக ஆட்சியரிடமும் பற்றும் நன்மதிப்பும் கொண்டவர்களாய்த் திகழ்ந்தனர். மறைந்த நடிகர் பகவதி அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

# கோச்செங்கணான் யார்?

[டாக்டர் இரா. கலைக்கோவன் M.B.B.S., D.O.]

(முன் இதழ் ௪00ஆம் பக்கத் தொடர்ச்சி)

சோழனுடன் போரிட்ட சேரமன்னனின் பெயர் எந்த ஒரு பாடலிலும் கூறப்படவில்லை. பாடல்களின் அடிக்குறிப்புகளில் மட்டுமே அம்மன்னன் கணைக்கால் இரும்பொறை என்று குறிப்பிடப்படுகிறான். அப்படியானால் சோழ வேந்தனுடன் போரிட்டது கணைக்கால் இரும்பொறையா அல்லது வேறு சேரவேந்தனா? வேறு சேரமன்னன் என்றால் அவன் யாராக இருக்க முடியும் என்பதைத் தெளிய வேண்டும்.

சோழன் கோச்செங்கணானும் சேரமன்னனும் பொருத இடம் கழுமலம் என்று களவழி நாற்பதும், குணவாயிற் கோட்டம் என்று தமிழ் நாவலர் சரிதையும், திருபோர்ப்புறமெனப் புறநானூறும் பேசுகின்றன. இவற்றில் போர் நடந்த இடம் எது என்பதை ஆய்ந்தறிய வேண்டும்.

சேரமன்னர்களின் வரலாற்றை ஆய்ந்தெழுதிய பெருமக்களும்இப்போர் குறித்தும் இதன் முடிவு குறித்தும் குழப்பமான நிலையிலேயே செய்தி தருகின்றனர். பேராசிரியர் அவ்வை சு துரைசாமி அவர்கள் கழுமலத்தில் போர் நடந்ததாகவும் பின் திருப்போர்ப்புறம் என்னுமிடத்தே தொடர்ந்த போரில் கணைக்கால் இரும்பொறை தோல்வியுறக் குடவாயிற் கோட்டத்தில் சோழனால் சிறைவைக்கப்பட்டதாகவும் கூறுகிறார்.[20]

துடிசைகிழார் சிதம்பரனார் அவர்களோ, இருவருக்கும் பல போர்கள் நடந்ததாகவும், அவைகளுள் சிறந்தவை நான்கென்றும் குறிப்பிடுகிறார்.[21] அவர் கூற்றுப்படி,

முதல்போர் குணவாயிற் கோட்டத்தில் கி. மு. 45இல் நடைபெற்றது. சேரன் தோற்றான். இதற்கு ஆதாரமாகத் தமிழ் நாவலர் சரிதையின் அடிக்குறிப்பைக் கொள்கிறார்.

இரண்டாம் போர் சோழ நாட்டு வெண்ணிப் பறந்தலையில் கி. மு. 42இல் நடைபெற்றது. இதிலும் சேரன் தோற்றான். இதற்கு ஆதாரமாக நற்றிணை முகவுரையைக் காட்டுகிறார்.

---

20. பண்டை நாளைச் சேரமன்னர்கள்—அவ்வை சு. துரைசாமி, பக். 299.

21. சேரர் வரலாறு—துடிசைகிழார் சிதம்பரனார், பக். 138.

மூன்றும் போர் கழுமலம் என்னும் இடத்தில் கி. மு. 40இல் நடைபெற்றது. இதிலும் சேர அரசன் தோற்றுச் சிறைபிடிக்கப் பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் அடைக்கப்பட்டான். இது கேள்விப்பட்டு, பொய்கையார், கடைச்சங்கப் புலவராயும் சோழன் கோச்செங்கணனின் நண்பராகவும் இருந்தமையால், சோழன் வெற்றியைக் குறித்துக் களவழி பாடி அதற்குப் பரிசாக சேரனைச் சிறையினின்று மீட்டார்.

நான்காம் போர், கொங்கு நாட்டில் திருப்பூருக்குப் பக்கத்தி லுள்ள (திருப்போர்ப்புறம்) கோயில் வெளி என்னும் இடத்தில் கி. மு. 35இல் நடந்தது. இதிலும் சேரன் தோல்வியுற்று மீட்டும் சிறைபிடிக்கப்பட்டான். இதுபோழ்துதான், அவன் புறநானூற்றின் 74ஆம் பாடலான, 'குழவி இறப்பினும்' என்ற பாடலைப் பாடி உயிர் துறந்தான்.

துடிசைகிழார் அவர்கள் குறிப்பிடும் இப் போர்களை ஒவ் வொன்றாக ஆராய்வோம். முதல் போர் குணவாயில் கோட்டத் தில் நடந்ததாகக் கூறப்படுவதற்குத் துடிசைகிழார் அவர்கள் தமிழ் நாவலர் சரிதையின் அடிக்குறிப்பினையே ஆதாரம் காட்டு கிறார்கள். அதே அடிக்குறிப்பில், சேரன் சிறைப்பட்ட செய்தி யும், அவன் 'குழவி இறப்பினும்' என்னும் பாடலை அங்கிருந்தே எழுதிப் பொய்கையாருக்கு அனுப்ப, அவர் வந்து சோழனைப் பாடிச் சேரனை விடுதலை பெற்ற செய்தியும் சொல்லப்பட்டுள்ளன. இதையெல்லாம் துடிசைகிழார் அவர்கள் ஏனோ கொள்ளவில்லை.

உறையூர்க் கோட்டையின் கிழக்குப் பக்கத்து வாயிலே குண வாயில் கோட்டம் என்றும் அதுதான் தற்போதைய தாயுமான சுவாமி மலைக்கோயில் உள்ள பகுதி என்றும் துடிசைகிழார் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.[22] உறையூர்க் கோட்டையின் கிழக்குப்பக்க வாயில்தான் குணவாயிற் கோட்டமென்றால், சேரன் சோழன்மீது படையெடுத்து வந்ததாகக் கொள்ள நேரிடும், சேரன், கோட்டை வாயிலருகில் படையுடன் வரும் வரை சோழன் என்ன செய்து கொண்டிருந்தான் என்ற வினா எழும்! சோழப் பெருமானின் பெருவீரத்தைப்பற்றிய ஐயம் வரும்! எனவே குணவாயிற் கோட்டத்தில் போர் நடந்ததாகக் கொள்வது பொருத்தமற்றது.

தமிழ் நாவலர் சரிதை காலத்தால் மிகவும் பிற்பட்டது. புறநானூற்று அடிக்குறிப்புக்கும் தமிழ் நாவலர் சரிதை அடிக்குறிப்

---

22. சேரர் வரலாறு—துடிசைகிழார், பக். 139.

புக்கும் பல வேறுபாடுகள் உள்ளன. புறநானூற்றில் குறிக்கப் பட்டுள்ள குடவாயிற்கோட்டம் இதில் குணவாயிற்கோட்டம் என்று குறிக்கப்பட்டுள்ளது. குடவாயிற்கோட்டம் என்பதே குணவாயிற் கோட்டம் என்று தவருகத் திரித்து எழுதப்பட்டிருக் கலாம், என்று கொள்வதே பொருத்தமானதாக அமையும். இக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் இருந்ததாகக் கருதப்படும் சேரன், சிறையில் இருந்தபடியே பொய்கையாருக்குப் பாட் டெழுதி அனுப்பியதாகத் தமிழ் நாவலர் சரிதை அடிக்குறிப்பு கூறுவது எவ்வகையானும் பொருந்தாது. அது சேரமானின் வீரத்துக்கே இழுக்குத் தேடுவதாக அமையும். எனவே தமிழ் நாவலர் சரிதைக் குறிப்பில் கண்டுள்ள செய்திகள் தவருனவை என்று முடிவு கோடலே பொருந்தும்.

இரண்டாவது போர் வெண்ணிப் பறந்தலையில் நடைபெற்ற தாகக் குறிப்பிடுகிருர் துடிசைகிழார். இதற்கு நற்றிணை முகவுரை ஆதாரம் காட்டப்படுகிறது. நற்றிணையில், பொய்கையார் வரலாறு கூறுமிடத்தில், சோழனுக்கும் சேரனுக்கும் வெண் ணிப்பறந்தலை (கோயில் வெண்ணிவெளி)யில் போர் நடந்ததாக வும், அப் போரில் சேரமான் தோற்றுக் குடவாயிற் கோட்டத்தில் சிறை வைக்கப்பட்டான் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும் தொடர்ந்து, இப் பொய்கையாரே வைணவர்கள் கூறும் பொய்கையாழ்வாரென்று அறியப்படும் என்றும் குறிப்பிடப்பட் டுள்ளது.[23] இங்கு இரண்டு செய்திகள் முரண்படுகின்றன.

1. கோயில் வெண்ணி வெளியில் நடந்ததாகக் கூறப்படும் இப் போரில் சேரன் சிறைப்பட்டான் என்று நற்றிணை முகவுரை சொல்கிறது. ஆனுல் துடிசைகிழார் அவர்கள் இப் போரை வெண்ணிப்பறந்தலையில் நடந்ததாகக் கொண்டு, அஃதாவது வெண்ணிப் பறந்தலை வேறு, கோயில்வெளி வேறு என்று எடுத்துக்கொண்டு சேரன் தோற்ருன் என்று மட்டுமே கூறுகிருர். ஓரிடத்தில் நடந்த போரையே இரண்டு இடங்களில் நடந்த தாகக் கொண்டு இரண்டு போர்களாகக் கற்பனை செய்திருப்பது வியப்புக்குரியது.

2. களவழி பாடிய புலவரும் முதலாழ்வார்களுள் ஒருவரான பொய்கையாழ்வாரும் ஒருவரென்று நற்றிணை முகவுரை குறிப்பிடு வதைக் கொண்டால், பொய்கையாழ்வாரின் காலமும் இப் போர் நடந்ததாகத் துடிசைகிழார் அவர்கள் குறிப்பிடும் காலமும் பொருந்தாமல் போகும். எனவே இந்த இரண்டாவது போர்ச்

23. நற்றிணை—கழகப்பதிப்பு, பாடினேர் வரலாறு, பக். 40.

செய்தி குறித்துத் துடிசைகிழார் அவர்கள் கூறும் செய்திகள் பொருந்தி வரவில்லை.

இதே போரைப்பற்றித் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில், திருநறையூர்ப் பதிகத்தில் சோழன் கோச்செங்கணனைப் பாடும்போது,

"வெங்கண்மா களிறுந்தி வெண்ணியேற்ற
விறல்மன்னர் திறலழிய வெம்மா வுய்த்த
செங்கணான் கோச்சோழன்",

என்றும்,

"கவ்வைமா களிறுந்தி வெண்ணியேற்ற
கழல் மன்னர் மணிமுடிமேல் காகமேற"

என்றும் பாடுவதால், வெண்ணியில் கோச்செங்கணான் பகைவருடன் போரிட்டது உறுதியாகின்றது. இப் போரில் செங்கணானுடன் போரிட்டுத் தோற்ற, கழல் மன்னரென்றும் விறல் மன்னரென்றும் குறிக்கப்பெறுபவர் யார்? நற்றிணை முகவுரையின்படி இப்போர் சோழனுக்கும் சேரனுக்கும் இடையே நடந்ததென்று கொண்டால் அச் சேர வேந்தன் கணைக்கால் இரும்பொறைதான் என்பதற்குச் சான்றுகள் உள்ளனவா? இப் போரில் சேரன் சிறைப்பட்டான் என்று நற்றிணை முகவுரை சொல்கின்றது. ஆனால் திருமங்கையாழ்வார் அது குறித்து ஏதும் தம் பதிகத்தில் குறிப்பிடவில்லை என்பது நினைக்கத்தக்கது.

மூன்றும் போர் கழுமலத்தில் நடந்ததாகத் துடிசைகிழார் குறிப்பிடுகிறார். இப் போர் நடந்ததைக் களவழி நாற்பது பாடல்களே அரண் செய்கின்றன. கோச்செங்கணானைப்பற்றிக் கூறும் பல நூல்களுள் நேரடியாகக் கோச்செங்கட்சோழனைப் பாடிய பெருமையை உடையது களவழி நாற்பது ஒன்றே. எனவே களவழி நாற்பது தரும் செய்திகளை ஏற்பது ஏற்புடைத்து. இது கோச்செங்கட்சோழன் வஞ்சியரசன் ஒருவன்மீது செய்த போரைப் பாடிச் சோழனைப் புகழும் முகத்தான் எழுந்த நூலாகும். இதில் நாற்பது பாடல்கள் உள்ளன. இவற்றுள் ஐந்து பாடல்களில் செங்கட் சினமால் என்றும்,[24] மூன்று பாடல்களில் செங்கண் மால் என்றும்,[25] மூன்று பாடல்களில் திண்தேர்ச் செம்பியன்

24. களவழி நாற்பது பாடல்கள் 15, 21, 29, 30, 40.

25. ,, ,, 4, 5, 11.

என்றும்,[26] பிற பாடல்களில் நீர்நாடன், புனல்நாடன் என்றும் இச் சோழர் பெருமான் குறிக்கப்படுகிருன்.

இந் நூலின் முப்பத்தாரும் பாடலில்,

"காவிரி நாடன் கழுமலம் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்ருர் குடையெலாம் கீழ்மேலாய்
ஆவுதை காளாம்பி போன்ற புனனுடன்
மேவாரை அட்ட களத்து"

எனவரும் வரிகள் கொள்ளத்தக்கன. 'கழுமலம் கொண்ட நாள்' என்னும் குறிப்பு போர் நடந்த இடத்தையே குறிப்பதென்பது உணரத்தக்கது.

நான்காவது போர் திருப்போர்ப்புறம் (திருப்பூருக்கு அருகிலுள்ள கோயில்வெளி) என்ற இடத்தில் நடந்ததாகவும், சேரன் அங்கும் தோற்றுச் சிறைபிடிக்கப்பட்டான் என்றும், அந் நிலையில் தான் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் 'குழவி இறப்பினும்' என்னும் பாடலைப் பாடித் துஞ்சினுன் என்றும் துடிசைகிழார் குறிப்பிடுகிருர். இந்தக் கோயில்வெளிப் போரைத்தான் நற்றிணை முகவுரை வெண்ணிப் பறந்தலைப் போராகக் குறிப்பிடுகின்றது; புறநானூற்று அடிக்குறிப்பு திருப்போர்ப்புறத்துப் போராகக் குறிப்பிடுகின்றது பெரிய திருமொழி வெண்ணிப் போராகக் குறிப்பிடுகின்றது. இம் மூன்று செய்திகளை நோக்க, துடிசைகிழார் குறிப்பிட்ட இரண்டாவது போரும் நான்காவது போரும் ஒன்றே என்பதும், பல பெயர்களைக் கொண்ட ஒரே இடத்தில் நடந்ததென்பதும் பெறப்படும். மேலும் இதுவரை கண்ட செய்திகளிலிருந்து சோழன் கோச்செங்கணுன் பகை அரசன் ஒருவனுடன் கழுமலத்திலும், வெண்ணி என்னும் கோயில்வெளியிலும் போரிட்டிருப்பது புலனுகின்றது. இப் போர்களில் சோழனேடு பொருத பகையரசன் சேரவேந்தனே என்பது,

"மைந்துகால் யாத்து மயங்கிய ஞாட்பினுள்
புய்ந்துகால் போகிப் புலான்முகந்த வெண்குடை
பஞ்சிபெய் தாலமே போன்ற புனனுடன்
வஞ்சிக்கோ அட்ட களத்து",

என்னும் களவழி நாற்பதின் முப்பத்தொன்பதாம் பாடலால் அறியப்படும். இச் சேரவேந்தன் கணைக்கால் இரும்பொறை என்பதற்கு யாதொரு சான்றும் களவழி நாற்பதில் இல்லை.

---

26. 6, 22, 33.

வென்ற மன்னனைப் பல இடங்களில் பெயர் குறிப்பிட்டுப் புகழும் புலவர் தோற்ற வேந்தனின் பெயரை ஓரிடத்தானும் குறித்தாரில்லை.

உலாப் பாடல் வரிகளும், பரணிப் பாடல் வரிகளும், சோழன் களவழி நாற்பது கொண்டு விடுதலை செய்த மன்னனை வில்லவன், பொறையன், உதியன் என்று குறிக்கின்றனவேயன்றி 'கணைக் கால் இரும்பொறை' என்று ஓரிடத்தானும் குறித்தில. சோழனோடு போர் செய்த சேரவேந்தன் கணைக்கால் இரும்பொறையா அல்லது வேறு சேர மன்னனா என்பது ஆய்வுக்குரியது.

கோச்செங்கணனைப் பாடிய பொய்கையார் கோக்கோதை மார்பன் என்ற சேரமன்னனைப் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இரண்டும்[27] நற்றிணையில் ஒன்றுமாய் இடம் பெற்றுள்ளன.[28] களவழி நாற்பது உரையில் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள், புறநானூற்று அடிக்குறிப்பு தமிழ் நாவலர் சரிதை அடிக்குறிப்பு இரண்டையும் கூறுமிடத்து, 'இவ்விரண்டினுள்ளே புறநானூற்றுக் குறிப்பே வலியுடையதென்று கொள்ளின், அது பரணி, உலா முதலியவற்றுடன் முரணுமைப் பொருட்டுத் துஞ்சினன் கணைக்கால் இரும்பொறையாகச், சிறை வீடு செய்து அரசளிக்கப்பட்டான் பிறனொரு சேரனுவன் என்று கொள்ள வேண்டும்' என்றும் 'அவ் வேந்தன் கணைக்கால் இரும் பொறையின் வேருகிச் சோழனுல் சிறைப்பட்டவனுயின் அவனை விடுவித்து, களவழி நாற்பது பாடல் பாடப்பட்டதென்று கோடல் அமையும்'[29] என்றும் ஒரு முடிவுக்கு வர முயல்கிறார்கள். இதையே டாக்டர் மா. இராசமாணிக்கனாரவர்கள் தம் சோழர் வரலாற்றில், 'இங்ஙனம் பேரறிஞரையும் (நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்) குழப்பத்திற்கு உட்படுத்தும் பொருத்த மற்ற அடிக்குறிப்புக்களைக் கொண்டு கோச்செங்கணான் போன்ற பேரரசர் காலத்தை வரையறுத்தல் வலியுடைத்தாகாது'[30] என்கிறார்கள்.

(தொடரும்)

———

27. புறநானூறு – உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு, செய்யுள்கள் 48, 49.

28. நற்றிணை—கழகப்பதிப்பு, செய்யுள், 11.

29. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, முகவுரை, பக். 5

30. சோழர் வரலாறு—டாக்டர் மா. இராசமாணிக்கனார், பக், 8

# இலக்கிய விருந்து!

[தி. நா. அறிவுஒளி, க. மு., கல். இ.,]

புரட்சிப் பாவேந்தர் 'குடும்ப விளக்கு' விருந்தோம்பல் (இரண்டாம் பாகம்) என்னும் நூலினைத் தமிழ்ப் பேரறிஞர் மறைமலையடிகளாருக்குப் படையலாக்கியுள்ளார்.

அப் படையல் இலக்கிய நயங் கனிந்திலங்குகிறது.

"திருமுன் படைத்தல்

இற்றைக்கு முப்பதாண்டின் முன் தொடங்கியே தனித் தமிழில் நூல் எழுதிக் காட்டியும், தனித் தமிழே வேண்டும் எனும் கருத்தை ஊட்டியும் வரும் நிறை தமிழ் ஆய்ந்தார் மறைமலையடிகளின் திரு முன் இதைப் படைக்கின்றேன்"

—என அரிய குறிப்பும் வரைந்துள்ளார்.

நிறைதமிழ் ஆய்ந்த மறைமலையடிகளார் துறைபல தோய்ந்த முறையறி பேரறிஞர்.

கதைக்கலை வலிமை வாய்ந்த இலக்கியக் கருவி (இலக்கிய வடிவம்) என உணர்ந்தார். அதனால்தான் 'கோகிலாம்பாள் கடிதங்கள்' என்னும் வரலாற்றுப் புகழ் மிக்க புதினத்தைப் படைத்தார்.

இக் கதையினைச் சுவைக்காக மட்டுமின்றி, வாழ்க்கை ஒழுங்கு பெற வேண்டியே அடிகள் எழுதினர்.

கதையின் தொடக்கமே சுவை கனிந்து இனிக்க வேண்டும்.

இவ்விலக்கணம் அடிகளின் புதினத் தொடக்கத்தில் சிறந்தமைந்துள்ளது:

"நேற்றிரவு எங்கள் வீட்டு மெத்தைமேல் நான் என் தங்கையோடும் உலாவிக்கொண்டிருக்கையில் நீர் வீசி எறிந்த ஏதோ கடுதாசி மடிப்பு ஒன்று என் எதிரே வந்து விழுந்தது. அதனை நீர் எறிந்ததை என் தங்கை பார்க்கவில்லை."

எப்படித் தொடக்கம்! மிக மிக அருமை மட்டுமா? புதுமையும் விருவிருப்புங் கூட அமைந்திருக்கிறதன்றோ?

கதைத் தலைவன் தெய்வநாயகம் எழுதி வீசிய காதல் முடங் கலைக் கோகிலாம்பாள் எடுத்து மறைத்து வைத்திருக்கிருள். அவள் நிலைமையை விளக்குமிடம் :—

"நிலத்தில் புதையலாக வெட்டி எடுத்த ஒரு செப்புப் பானையை மறைவான ஓர் இடத்தில் கொண்டு போய் வைத்தவன் அப் பானையின் உள்ளேயிருப்பது இன்னதென்று அறிய, யாரு மில்லாத சமயத்தை நாடுவது போல, நானும் உமது கடிதத்தின் உள்ளிருப்பது இன்னதென்று உணரப் பதைபதைத்தேன். தங்கை அப்புறம் போனதும், நான் படிக்கும் புத்தகங்களில் ஒன்றை எடுத்து அதனுள் உமது கடிதத்தைப் பிரித்து வைத்துப் பார்த்தேன். அதனைப் படிக்கும் போதே என் உடம்பெங்கும் அனன்றது; என் கண்கள் மயங்கின; என் உயிரும் உணர் வும் என் வசப்படாமற் போய்விட்டன."

எவ்வளவு இயற்கையாகக் கோகிலாம்பாளின் மன உணர்வு நிலையை ஆசிரியர் எழுத்தோவிய மாக்கியுள்ளார்!

தெய்வநாயகத்தின் பண்பு மணக்கும் காதல் முடங்கல் எண்ணஎண்ண இனிப்பதொன்றும்.

"கண்மணி! உன் அழகிய உருவமானது என் நினைவிற் குடி கொண்டுவிட்டது; உன்னை நினைக்கநினைக்க உன் மேல் எனக்கு அளவிடப்படாத அன்பு ஊறித் ததும்பி வழிகின்றது. என் செல்வியே! உன்னை இங்ஙனம் அழைப்பதுபற்றி என் மேற்கோபம் அடைவாயோ? என் செய்வேன்! என் மேற் குற்றஞ் சொல்வாயோ? நீ என்னை எப்படிச் செய்தாலும் நன்றே. உன்னை இன்றி நான் எப்படி உயிர் வாழ்வேன்? (ப : 3)

—இப் பகுதி கதைத் தலைவியை உருக்குவதைப் போன்றே சுவைஞரையும் அனலிலிட்ட மெழுகாக்குகின்றது.

கோகிலாம்பாள், தன் காதலன் தெய்வ நாயகனைப் பிரிந்து வாழுந் துயர நிலையை மடலில் விளக்குமிடம் இலக்கிய ஆழம் மிக்கதாகும் :

"பாலினுந் தூய மனமுடையீர், உம்மையும் அகன்றிருக்க என் உள்ளம் இசைகின்றதில்லை; என்னை அகன்றிருக்கும் ஒவ்வொரு நிமையமும் உமக்கு ஒவ்வொரு வருடமாய் இருக்கின்ற தென வரைந்தீர்; எனக்கோ அப்படியில்லை; உம்மை விலகியிருக் கும் ஒவ்வொரு நொடியும் எனக்கு ஒவ்வோர் ஊழியாய் இருக்கின்றதே" (ப : 21)

கோகிலாம்பாளின் உணர்வு நிலையை விளக்கும் இப் பகுதி, சேக்கிழாரின் திருத்தொண்டர் மாக்கதையில் வரும்,

"யாழின்மொழி எழில்முறுவல் இருகுழைமேற் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார் மணியல்குல் துறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்கண்
ஊழியாம் ஒருகணந்தான் அவ்வூழி ஒருகணமாம்"
(சேக்கிழார், ஏயர்கோன் : 268)

என்னும் பாடலினை அடியொற்றி உரையோவியமாக்கியதன்றோ !

'கோகிலாம்பாள் கடிதங்கள்' புதினம் மற்றக் கதைகளைப் போல வெறுங் கதையாகக் கருதத் தக்கதன்று.

அஃது உரைப் பாவியம் ; கருத்தோவியம் ஆகும்.

எண்வகைச் சுவைகளும் மெய்ப்பாடுகளும் இனிதின் துளும்பும் தீந்தமிழ்ப் பேரிலக்கியமாகும்.

1. நகை

இயல்பாய், உண்மை ஒளிர்வதாய், வாழ்வியல் தன்மைக்கு மாறாத நகைச் சுவையே கலைத் திறனில் தலைசிறந்ததாகும்.

கதைத் தொடக்கத்தில் கோகிலா, தெய்வநாயகத்தின் காதல் முடங்கலை எடுத்து, ஒளித்துத் தன் தங்கையிடம் பொய் பேசி ஏமாற்றுவதே நல்ல நகைச் சுவைதான்.

கோகிலாவின் மாமி, நாத்தூண் நங்கை ஆகியோர் வரும் காட்சிகளில் இயல்பான நகைச்சுவை அமைந்துள்ளது.

2. அழுகை

கோகிலாவின் மாமனார்க்கு மூத்த மனைவியின் குழந்தை நஞ்சூட்டப் பெற்று இறந்துபடுதலும், அதனை அவர் கோகிலா விடம் உள்ளம் உருகும் வண்ணம் எடுத்துரைத்தலும், கோகிலா கள்ளர் குகையிற் சிறைப்பட்டு வாடுதலும், பாரசிகச் செல்வரும் கோகிலாவின் அண்ணன் சுப்பிரமணியனும் கள்ளரால் கொலை செய்தற்கு முயறலும் ஆகிய இடங்களில் அவலச் சுவை சிறந் தோங்கியுள்ளது.

3. பெருமிதம்

பிற்போக்குக் கருத்துகளை விடாப்பிடியாகக் கொண்டிருக்கும் கோகிலாவின் உறவுப் பெண்களோடு கோகிலா தன் கல்விப்

பெருமிதம் தோன்ற அறிவுறுத்துமிடம் கல்வி வீரத்திற்கு அரிய எடுத்துக்காட்டாகும்.

கோகிலா குகைச் சிறையிலிருந்து ஈடிலாத் துணிவோடு அருவி முழை வழியாக நீந்தித் தப்பிச்சென்று பம்பாயை அடைந்து, பாரசிகப் பெருமாட்டியுடன் காவல் துறையினரைக் கள்ளர் குகைக்குக் கூட்டி வந்து அவர்களைப் பிடிப்பதற்கு உதவுமிடம் பெண்மை மறத்திற்குச் சான்ருகும்.

கள்வர் கூட்டத்துடன் காவலர் படை போராடுமிடமும், கள்வர் தலைவன் குமாரசாமி கள்வரோடு போராடுமிடமும் போராண்மை பொலியும் வீரக் களங்களாகும்.

## 4. இளிவரல்

கோகிலாவின் மாமனுரின் இரண்டாம் மனைவியும், கோகிலாவின் நாத்தூண் நங்கையும், கோகிலாவின் மைத்துனனை விளக்குமாற்ருல் 'சாற்று முறை' செய்து கலாம் விளைக்குமிடம் முதலியவை இளிவரற் சுவை பயக்கின்றன.

## 5. மருட்கை

கோகிலாவின் மாமனுர் தெய்வக் காட்சி காணலும், அதனைக் கோகிலா காணலும், கள்வர் குகையிலிருந்து கோகிலா தப்பிச் செல்லும்போது காட்டில் ஆவி வடிவில் அவள் மாமனுர் வந்து வழித் துணையாவதும் அங்கொரு தேவ வடிவைக் காணலும் முதலியவை மருட்கைச் சுவை பயக்கின்றன.

## 6. அச்சம்

கோகிலாவையும் பாரசிகச் செல்வர் குடும்பத்தையும் குதிரை வண்டியினர் கள்வர் தூண்டுதலால் கடத்திச் செல்லலும், கோகிலாவை அவள் மாமனுர் குடும்பம் கொடுமை செய்வதும் சிறைப்பட்ட கோகிலா குகையில் தனியே அவல முறுவதும் அச்சச் சுவையளிப்பன.

## 7. வெகுளி

கோகிலாவின் மாமி முதலியோரை அவள் மாமனுர் சினந்து அடக்கலும், தெய்வச் சீற்றம் பெண் குழந்தையைக் கொன்ற கோகிலாவின் மாமிக்குக் கொடிய கருநிற உருவத்தின் வாயிலாகக் கொடிய தண்டனை வழங்குதலும், காவலரோடு கோகிலா, கமலா (பாரசிகப் பெருமாட்டி முதலியோர் கள்ளர் இருப்பிடந் தேடிச் செல்லுதலும் வெகுளிச் சுவை நல்குவன.

## 8. உவகை

இந் நூலே ஒரு காதல் நூல்! நூல் முழுமையுமே காதலி, காதலனுக்கு எழுதிய ஒப்பற்ற காதல் முடங்கல்!

ஆகவே நூல் முழுவதும் உவகைச் சுவையே உயிராக விரவியமைந்துள்ளது.

ஆயினும், இந் நூலில் ஒரேயோரிடத்தில்தான் காதலனும் காதலியும் நேரில் சந்திக்கின்றனர்; மற்றபடி நூல் முழுதும் காதலர் சந்திப்போ, அளவளாவலோ அமையவில்லையென்பதொரு வியத்தகு புதுமையே!

வாடி புகைவண்டிச் சந்திப்பில் தெய்வ நாயகம் கோகிலா முதலியோரைச் சந்திக்கிருன். அவ்விடத்திலும் கோகிலா நாணத்தின் மிகுதியால் காதலன் கேட்ட ஒரு வினவுக்கும் விடை கூருமல் அமைதிப் புன்னகை பூத்து அமைந்துவிடுகிருள்!

அகப் பொருள் இலக்கியங்களுக்குப் பிறகு உரை நடையில் மலர்ந்த ஓர் அரிய அகப்பொருள் நுட்ப இலக்கியம் கோகிலாம்பாள் கடிதங்களாகும். இதற்கு அடுத்து, பாவேந்தரின் 'குடும்ப விளக்கினை'க் கூறலாம்.

நாகரிகம் ஆர்ந்த பண்பாடு உயிர்க்கும் அகப்பொருளிலக்கியமே ஒரு நாட்டின் உயிர் நிலையை—உயர் நிலையை—உணர்த்தும். அத்தகு உயர்வினை அடிகளார் அளித்த அமிழ்தக் கதை பெற்றுள்ளது.

இந் நூலின் உயிரும் குருதியும் உடலும் எல்லாமே உவகைச் சுவையேயாகும்.

(தொடரும்)

———

## இன்றைய உலகின் நிலை

கண்ணுக்குத் தெரியும் தேளையும் பாம்பையும் விட, கண்ணுக்குத் தெரியாத நோய்க் கிருமிகளுக்காக மருத்துவர்கள் அஞ்சுகிருர்கள். ஆனல் அந்த உண்மை குழந்தைகளுக்குத் தெரிவதில்லை. இன்றைய உலகம் குழந்தை நிலையில்தான் உள்ளது. உலக அமைதிக்கு வல்லரசுகள் அமைவது எவ்வளவு இடையூறு என்பதை நம் காலத்தவர் இன்னும் உணரவில்லை.

டாக்டர் மு. வரதராசனர்

# பெரியபாளையம் சுக்கிரீசுவரர் கோயில்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)
பொள்ளாச்சி.]

தொழில்வளத்தில் "தென்னக பம்பாய்" எனப் புகழப்பெறும் திருப்பூரினின்றும் ஊத்துக்குளி செல்லும் வழியில் ஏறக்குறைய எட்டு கி மீ. தொலைவில் பெரியபாளையம் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. வரி, வரிமானம், தாமரை இதழ் குமுதம் ஆகியவற்றுடன் அதிட்டானம் அமைக்கப்பெற்றுள்ளது. குமுதம் வட்டம், முப்பட்டை அல்லது ஆறுபட்டை கொண்டதாக உருவாக்கப்பட்டுள்ளது. கருவறையில் வெளிப்புறச் சுவர்களின் ஓரங்களில் இரு கூடுகளுடன் கூடிய கபோதத்துடன் இரு அரைத்தூண்கள் காணப்படுகின்றன. இவற்றின் இடையில் உள்ள ஆறு அரைத்தூண்களுள் நடுவில் உள்ள இரு அரைத்தூண்களுக்கு மேல் இரு கூடுகளுடன் கூடிய கொடுங்கையும் அதற்குமேல் கூடும். அதற்கு மேல் இரு கூடுகளுடன் கூடிய கபோதமும் அமைக்கப்பட்டுள்ளன. இங்குள்ள அரைத்தூண்கள் கலசம், தாமரை, தாடி, பலகை ஆகிய உறுப்புக்களைக் கொண்டுள்ளன. கபோதத்தின்மேல் சோழர்களின் கலைப் பாணியான யாளி வரிசை காணப்படுகிறது. அதிட்டானம் முதல் யாளி வரிசை வரை கல்லாலும், அதற்குமேல் செங்கல்லாலும் கட்டப்பெற்றுள்ளது.

கருவறையின்மேல் அமையப்பெற்ற விமானம் ஒரு தளத்தைக் கொண்டுள்ளதால், "அல்ப விமானம்" என்று அழைக்கப்பெறும். விமான தளத்தின் நாற்புறங்களிலும் பக்கத்திற்கு இரண்டு கூடங்களும் ஒரு சாலையுமாக மாலை போன்று காணப்படுகிறது. தளத்திற்குமேல் அண்ணலின் ஊர்தியான காளையும் அதனை அடுத்து பூதமும் நாற்புறங்களிலும் அமைக்கப்பெற்றுள்ளன. கிரீவத்தில் உள்ள புரைகளில் மேல் புறத்தில் அஞ்சன வண்ணனும் திருமாலும், தென்புறத்தில் சிவபெருமானின் யோக வடிவான ஆலமர் செல்வனும், வடபுறத்தில் படைத்தற்றொழில் புரியும் நான்முகனும் ஆக மும்மூர்த்திகளின் திருவுருவங்கள் காணப்படுகின்றன. கீழ்ப்புறமாக உள்ள புரையில் அண்ணல் சுகாசன (இன்ப இருக்கை) மூர்த்தியாக எழுந்தருளியுள்ளான்.

இவை எல்லாம் சுதையால் ஆனவை. சோழர்காலப் படைப்புகள் என்று பறைசாற்றுவன போன்று அழகு மிளிர உருவாக்கப்பெற்று இருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாம். சிகரம் எட்டுப் பட்டை கொண்டது. நான்கு மூலைகளிலும் கூடுகள் அமைக்கப்பெற்றுள் ளன. கூடுகளுக்குக் கீழே கிரீவத்தில் உள்ள புரைகளுக்கு இடை யில் தூண்கள் வட்ட வடிவத்தில் காணப்படுகின்றன. சிகரத்திற்கு மேல் தூபி அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையை அடுத்து அர்த்த மண்டபமும், மகா மண்டபமும் கட்டப்பெற்றுள்ளன. அர்த்த மண்டபத்தின் வெளிச் சுவரில் வடபுறமும், தென்புறமும் ஓரங்களில் இரு அரைத்தூண்கள் உள்ளன. நடுவில் நான்கு அரைத்தூண்களும், கும்ப பஞ்சரம் என்ற அமைப்பும் காணப்படுகின்றன. நடுவில் உள்ள இரு அரைத்தூண்களுக்குமேல் இரு கூடுகளுடன் கூடிய கொடுங்கை, அதற்கு மேல் கூடு, அதற்கு மேல் தாமரை இதழ் போன்ற அமைப்புகள் உள்ளன.

மகா மண்டபத்தின் வெளிச் சுவரில் வடபுறமும், தென் புறமும் ஓரங்களில் இரு அரைத்தூண்கள் உள்ளன. நடுவில் உள்ள நான்கு அரைத்தூண்களில் இரு அரைத்தூண்களுக்கு மேல் வடபுறத்தில் திருவாசியும், தென்புறத்தில் இரு அரைத் தூண்களுக்கு இடையில் கதவும் உள்ளன. இவற்றிற்கு மேல் தாமரை அமைப்பு காணப்படுகிறது தென்புறக்கதவை ஒட்டி இருபுறமும் படிகள் கொண்ட முகப்பு கட்டப்பெற்றுள்ளது. முன் புறத்தில் ஆறு அரைத்தூண்களும், அவற்றிற்கு இடையில் கதவும் அமைக்கப்பட்டுள்ளன.

அண்ணலின் கருவறையை ஒட்டித் தென்புறமாகப் பிற்காலத் தைச் சார்ந்த அன்னையின் திருமுன்பு உள்ளது. இதற்கு முன் காளையும், மடப்பள்ளியும் காணப்படுகின்றன. அண்ணலின் கோயிலின் முன் உள்ள மண்டபத்தில் இரண்டு காளைகளும், அதற்கு முன் கொடிமரமும் அமைந்துள்ளன.

கோயிலின் வடபுறத்தில் ஐந்து சுற்றாலயங்களும், முன்னால் இரண்டு சுற்றாலயங்களும், தென் புறத்தில் ஒரு சுற்றாலயமும், பின்புறத்தில் ஒரு சுற்றாலயமும் ஆக ஒன்பது சுற்றாலயங்கள் காணப்படுகின்றன. பொதுவாக முற்காலச் சோழர் காலத்துக் கோயில்களில் தமிழ்த்தாயின் தவப்புதல்வன் மாமன்னன் இராச ராசசோழன் காலம்வரை எட்டுச் சுற்றாலயங்களை அமைப்பது வழக் கத்தில் இருந்து வந்தது. பதினாறு அல்லது முப்பத்திரண்டு சுற்றா லயங்களை அமைப்பதும் உண்டு. இங்குள்ள சுற்றாலயங்கள் மூன்றில்

இலிங்கத்திருவுரு காணப்படுகிறது. மீதி உள்ளவற்றில் சண்டி கேசுவரர், பைரவர், துர்க்கை, சூரியன், முருகன் மற்றும் விநாயகர் உள்ளனர். எட்டுச் சுற்ருலயங்களில்கதிரவன், திங்கள் முருகன், விநாயகர், சண்டிகேசுவரர், பைரவர், ஏழு கன்னியர் மற்றும் சேட்டை ஆகியோரை அமைப்பர் என திரு. பாலசுப்ர மணியம் "முற்காலச் சோழர்களின் கோயில்கள்" என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆனல் திரு. சௌந்திரராசன் "இந்தியக் கோயிற் பாணிகள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ள சுற்றுப்புறத் தெய்வங்களில் பைரவர் குறிப்பிடப்படவில்லை. அதற்குப் பதிலாக துர்க்கையைக் கூறியுள்ளார்.

சுற்ருலயங்களில் உள்ள திருவுருவங்களில் குறிப்பிடத் தக்கவர் பைரவராம். பைரவர் தமது ஊர்தியான நாயுடனும் நான்கு கைகளுடனும் அமைக்கப்பட்டுள்ளார். பின்வலக்கையில் பாம்பும், பின்இடக்கையில் டமாரமும், முன்வலக்கையில் சூலமும், முன்இடக்கையில் கபாலமும் காணப்படுகின்றன. அச்சத்தை விளைவிக்கத் தலையைச் சுற்றிலும் தீப்பிழம்பும், வாயில் இரு கோரைப் பற்களும் அமைக்கப்பட்டுள்ளன. தீப்பிழம்புக்கு இருபுறமும் பாம்புகள் காணப்படுகின்றன. இடையில் இரு பாம்புகள் கடிபந்தமாகப் பின்னி அமைக்கப்பட்டு, ஒரு பாம்பின் தலை முன்வலக்கையின் கீழும், மற்ருெரு பாம்பின் தலை முன்இடக் கையின் கீழும் காணப்படுகின்றன. ஆகம விதிகளின்படி ஆடை யின்றி அமைக்கப்பட்டுள்ளான்.

அடுத்துக் காணவேண்டியது தென்புறமாக உள்ள ஆலின் கீழ் அமர்ந்து அறம் நால்வர்க்கு உரைத்த ஆலமர் செல்வனும். தலையில் சடாமண்டலம் இலங்க, பின்வலக்கையில் பாம்பும், பின் இடக்கையில் சூலமும், முன்வலக்கை வியாக்யான முத்திரையிலும், முன்இடக்கை புத்தகத்துடன் தொடைமீது வைத்த நிலையிலும் காணப்படுகின்றன. வீர இருக்கையில் அமைந்துள்ள இவனது காலடியில் முயலகனும், பீடத்தின்மீது அறிவுரை பெறும் இரு முனிபுங்கவர்களும் உள்ளனர். ஆகமங்களில் கூறப்படும் ஆலமர் செல்வனின் நான்கு வடிவங்களில் இது வியாக்யான தென்முகக்கடவுள் எனப்படும். சோழர் காலக் கலைத்திண்மைக்கு இது ஒரு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

வானர மன்னன் சுக்கிரீவனல் வணங்கப்பெற்ற இறைவன் என்ற காரணம் பற்றி இவன் சுக்கிரீசுவரர் எனப்படுகிருன். அர்த்த மண்டபத்தின் முகப்பில் சுக்கிரீவன் இலிங்கத்தைப் பூசிப்பது போன்று செதுக்கப்பட்டுள்ளது. இங்குள்ள இறைவி யின் திருநாமம் ஆவுடைநாயகி என்பதாம். இறைவியைத்

தனியாக அமைத்தமையால், ஆகம விதிகளின்படி நான்கு கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ளாள். பின் இரு கைகளில் பூ ஏந்தியும், முன்வலக்கை அபய முத்திரையிலும் முன்இடக்கை வரத முத்திரையிலும் உள்ளன. மகாமண்டபத்தில் அநுமன் மற்றும் வீரன் ஒருவனின் கற்சிலைகள் காணப்படுகின்றன. முருகன் சிற்றுலயத்தின் முன் சிதைந்த நிலையில் துர்க்கையின சிற்பம் ஒன்று உள்ளது. சுந்தர பாண்டிய தேவர் கல்வெட்டுகள் காணக் கிடக்கின்றன. மதில் மிகவும் சிதைந்த நிலையில் உள்ளது.

மகாமண்டபத்தில் அருமையான வேலைப்பாடமைந்த ஆடவல்லானின் செப்புச் சிலை ஒன்று உள்ளது. தமிழகத்தில் உள்ள ஏனைய ஆடவல்லானின் திருவுருவங்களைப் போன்று, நான்கு கைகளுடனும் சுற்றிலுந் தீப்பிழம்புகளுடன் கூடிய திருவாசியுடனும், காலடியில் முயலகனுடனும் உருவாக்கப்பட்டுள்ளான். சடை விரிந்து பரந்து இராது, ''கற்றைவார் சடையாக'' உள்ளது. ''இலங்கு எரி எடுத்தாடும்'' இறைவனின் திருமுகத்தில் காணப்பெறும் பொலிவு காண்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் எழிலமைப்பு உடையது. கலை ஆர்வம் மிக்கோர் கண்களுக்கு ஒரு பெரு விருந்தாக அமைந்துள்ளது. சோழர் காலத்தில் உலோகப் படிமம் அமைத்தல் எய்திய உன்னத நிலைக்குச் சான்றாக உள்ளது.

ஆளுடையநம்பியால் தமது ஊர்த் தொகையில் ''கொங்கிற் குறும்பிற் குரக்குத்தளியாய்'' என்று அழைக்கப்பெற்றது இத்திருக் கோயில் எனக் கொள்ளப்படுகிறது. எனவே இது தேவாரத்தில் வைப்புத்தலமாகக் குறிக்கப் பெறும் பேறு பெற்றது.

சோழப் பேரரசுக்கு வித்திட்ட திருமேனியில் தொண்ணூறும் இரு மூன்றும் புண் சுமந்த விசயாலய சோழனின் புதல்வன் முதல் ஆதித்த சோழன்தான் கொங்கு நாட்டைச் சோழர் ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தான் என்று வரலாறு கூறுகிறது. இதைத்தான் நம்பியாண்டார் நம்பிகள் தமது திருத்தொண்டர் திருவந்தாதியில், ''சிற்றம்பலமுகடு கொங்கிற்கனகம் அணிந்த ஆதித்தன்'' எனக் குறிப்பிட்டுள்ளார். ஆதித்த சோழன் கொங்கு நாட்டை வென்று, அங்கிருந்து கொணரப்பெற்ற பொன்னால் தில்லைச் சிற்றம் பலத்தை வேய்ந்தான் எனப்பெறுகிறது. இவனது ஆட்சிக் காலம் கி. பி. 871 முதல் கி. பி. 907 வரையாகும். சோழர் கோயில் கட்டிடக் கலைப்பாணியான யாளி வரிசையும், சுற்றுப்புறத் தெய்வங்களுக்குச் சுற்றுலயங்களும் இங்கு அமைந்துள்ளன. தியாகத்தின் திருவுருவமாம் மாமன்னன் இராசராச

சோழன் காலம் வரைதான் கோயில்களில் சுற்ருலயங்கள் அமைக்கும் வழக்கம் இருந்து வந்தது. மேலும் தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கும்ப பஞ்சரம் என்ற அமைப்பும் இங்குக் காணப் பெறுகிறது. இதுவன்றியும் 9 மற்றும் 10 ஆம் நூற்ருண்டு களில் கட்டப்பெற்ற பல்லவர் மற்றும் சோழர்களின் கோயில்களைப் போன்று இங்குக் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளில் தெய்வத்திருவுருவங்கள் காணப்படவில்லை. இறைவிக்கு என்று தனியாகக் கோயில் முதல் இராசேந்திர சோழன் காலம் முதற் கொண்டுதான் கட்டப்பெறலாயிற்று. இங்குள்ள இறைவி யின் கோயில் பிற்காலத்தைச் சார்ந்ததே. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டால், இந்தக் கோயிலின் காலத்தை 10 ஆம் நூற்ருண்டு அல்லது 11 ஆம் நூற்ருண்டின் முற்பகுதியாகக் கொள்ள வேண்டியுள்ளது.

இந்தக் கோயில் இன்று கவனிப்பார் யாரும் இன்றி அவல நிலையில் உள்ளது. இதைப் பேணிப் பாதுகாப்பது நம்மனோரின் கடமையும் பொறுப்புமாகும். அதற்கு ஆவன செய்யக் கலை ஆர்வம் மிக்கோரும், இறை அன்பர்களும் முன்வருவார்களாக.

———

## இன்பம் தரும் தமிழ்

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

கோடை தரும் மாமழையும்
குளிர்கா லக் கதிரொளியும்
வாடைதரும் மென்மலரும்
வான் நிலவும் வளர்நிதியும்
நாடுதரும் நற்புகழும்
நட்பியலார் நற்றுணையும்
நாடுகையில் நமையணுகா :
நாடறிந்த உண்மையிவை !

ஏடுகையில் ஏந்துகையில்
எம்மெதிரே ஓடிவந்து
தேடுகின்ற இன்பமெலாம்
தந்துதவுஞ் செந்தமிழே :
வாடிவிட்ட வடமொழிதான்
வழிபாட்டிற் குகந்ததெனுங்
கேடுதரும் கருத்துரைக்கும்
கேடுகெட்டோர் எங்கே! எங்கே!

# வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளும், தண்டமிழ்க் கவிகளும்

[தவத்திரு. தி. செ. முருகதாச அடிகள், திருவாமாத்தூர்]

(முன் இதழ் ககசு ஆம் பக்கத் தொடர்ச்சி)

தாம் தவம் செய்தலையே பெரிதாக எண்ணுவர். அக் காலத்தில் பாடல் வருகிறதால், எழுத முற்படுவதுபற்றித் தமிழின்மீது சினமேற்படுகிறது. 'நானிலைச் சதகம்' என்ற நூல், சரியையாதிய நான்கு நிலை பற்றியது. அதைப் பாடும்படி முருகன் மனதில் உணர்த்தியபடி பாடலாயினர்—முதற்கவியில்,

''மோனிலைத் தவமேசெய்து வியனருட் பெறவே வேண்டித்
தேனிலைத் தமிழின் மீதும் சினம்கொளும் சிறியேன் றன்னை
நானிலைச் சதகநன்னூல் நவின்றிடத் திருத்துகின்றோன்
தானிலைத் திருநீறீந்துழர் சரதமுன் னுரைத்துளானே''

என்றும்,

''தமிழ்க்கவிகள் உதிக்கும் வம்பு சகிக்கிலேனே''

என்றும் கூறியுள்ளனர்.

முருகப் பெருமான், அடிகள் மன வெளியில் காட்சி உதவினர். அக்கால் பாடல் எழுதும் எழுத்தாணியைக் கையில் எடுத்து ''இது என்ன சர்வசாதாரணியோ'' என்றனராம். எழுத்தாணிதான் எந்தக் கவியையும் எழுதுகிறது. அடிகள் ஓர் இயங்கும் தன்மையினர், இயக்குவது நான், என முருகன் குறிப்பிட்டனர் என்ற தன் அநுபவத்தை விளக்கியதாம். மேலும் அடிகள் பாடும் பாடல் யாவும் தாம் பாடுவதாகவே கூறினர். திருஞான சம்பந்தர், 'எனதுரை தனதுரையாக' என்றருளியதை ஒப்ப எண்ணலாம். இக் கருத்தை 'மயிலலங்காரம்' என்ற நூலில், மயிலையே விளித்து வினவுகின்றனர்.

''என்பாடலேயென யான்பாடும் பாடல்கள் யாவையும் சேய்
தன்பாடலேயெனச் சாற்றுகின்றான்; எந்தத் தன்மைகொண்டோ''

என்பதாம். மேலும் பாடுவதெல்லாம் பாட்டாகாது என்பர் வடலூர் அடிகளார்.

'அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாதபாட் டெல்லாம் மருட்பாட்டு'

என்பர். காரணம்? உயிர் உய்வதற்கான பாடலே சிறப்பென்பது கருத்து. அருளாளர் பாடியவையே அத்தகு சிறப்புடையன. அப்படிப் பாடுவதென்பது தெய்வநலம்பற்றி வருவது என்றறிதல் வேண்டும்

அடிகள் பாடிய பாடல்களைத் தம் பாடலென்று முருகன் கூறியதை விளக்க, மேலும் ஒன்று. தில்லைத் திருவாயிரத்தில் ஒரு பாடல். ஒருவன் பாட ஆசைப்பட்டு ஐந்து ஆண்டுவரை முயன்றும் அரைப்பாட்டே பாட வந்தது. அதுவும் கூட இறையருளின்றி வராது என்பதாம்.

''ஐயாண்டு சென்றுஓர் அரைப் பாடல்பாடினும்
தெய்வம் சாராப் புலமை யின்றே''

என்பது கொண்டு தொடங்குகிறது பாடல். அக் கருத்து 'அகத்தியம்' என்ற பெயரில் உள்ள இலக்கணத்தில் அகத்தியர் கூறியதாகும்.

''தென்கயிலைக் குறுமாமுனி நூல்சொல்லைச், செம்பவளத்து
இன்கனிவாய்க் கலைமங்கை தன் ஆடலை, யாவும்வல்ல
நின்கனற்கண் தருசேய் சொன்னவற்றை நினைந்திடிலென்
றன்கவிஒன் றுளதோ தில்லை யானந்தத் தாண்டவனே''

என்கின்றனர்.

தண்டபாணி அடிகள் உயிர் நாடியாகக் கொண்டது உயிரிரக்கமான சீவ கருணை. உலகில் உயிர்க் கொலை புரிபவர், ஊன் உண்பவர்களைச் சாடிய முறையில் பாடித் திருவருளிடம் முறையிடுவர். அப்படிப்பட்ட துன்ப மிகுதியில் நான் பாடிய பாடலைத் தானே கேட்கின்றாய். அருளால் அத் தீமையை அறச் செய்தபின் மனம் களித்துப் பாடப் பெறுவதை எப்போது கேட்பாய் என்று திருவருளை வேண்டுகிறார்.

''இன்னற் படுத்தி எனதுசொற் பாடல்கள் ஏற்றணிதல்
உன்னற் புதக்கரு ணைக்கழ கோ? மூத் துதிரமுதிர்
கன்னற் கரும்புனல் அட்டசெம் பாகிற் களிப்புதவித்
தன்னற் புதக்கவி கேட்பதென்றோ சச்சிதா னந்தனே''

என்பதும்,

''துன்புறுத்திப் பாடற் றொகைபுனையும் தற்குணம் போய்
இன்புறுத்திச் சூடும்நற் பண்பென் றடைவாய்—அன்பும்
அருளும் உடையாருக் கானந்தம் நல்கி
இருளறுக்கும் தொல்குணத் தானே.

என்பதும் ஆகும்.

முருகப் பெருமான் இப்படிப் பாடு - இன்னது தருவேன் என்றருள்வர். அதன்படி தராதபோது ஊடல் கொண்டு தீ - கடல் - ஆறு, வாய்க்கால் ஆகியவற்றில் ஏட்டினை இட்டழிப்பர்.

அப்படி இறந்த பாடற்கு அளவில்லை. இப்போதுள்ளவை ஐம்ப தாயிரத்தினளவாகும். இவ் விவரத்தை விளக்குவது ஒரு தனிக் கவி.

'கடலினும் பொருநை நதியினும், நெல்லைக்
காவினும் கழுகுமா மலைப்பால்
தடமுடன் எழும்நாத் தழலினும் கிடக்கும்
தமிழெலாம் தரப்பெற விழைந்தேன்
குடவளை முழங்கி அலைதரக் கயல்பாய்
குவளைநீர்த் திரைபடும் தாழை
மடலவிழ்ந் துயர்சீர்ச் செந்தில்வாழ் முருகா
மயிலில்வந் தருள்புரி வாயே.

இப்படி அழிக்கப்பட்ட பாடல்களை மீட்டும் தரும்படி வேண்டு கின்றனர். என்றோ தீயிலும் கடலிலும் அழிக்கப்பட்ட பனை ஓலை எப்படி வரும் என ஐயுறலாம். சுந்தரமூர்த்தி நாயனுர் பாடிய பாடற்படி அவிநாசியூர்த் தலத்தில்—வறண்டிருந்த குளத்தில் நீரும், முதலையும் - அதனுல் உண்டு சீரணிக்கப்பட்ட சிறுவன், மூன்ருண்டு வளர்ச்சியுடன் வெளிவரச் செய்தது, திருவருள் என்று கருதினுல் எது நடவாது என்பது சிந்தனை. அப்படியிட்ட ஏடுகள் ஆணவ முனைப்பா லிடவில்லை. திருவருள் முன்னிலையில் அருள்பெற வேண்டித் தானே—அவ்வருளும் தன்னலம்பற்றிய தல்லவே என்பது அடிகள் கருத்தென்க.

இவ்வாறெல்லாம் அடிகள் திருநெல்வேலியில் வாழ்ந்த போது, உடனிருந்து பழகிய புலவர் பலராவர். அவருள் ஒருவர். தச்சநல்லூரில் வாழ்ந்தவர் அழகிய சொக்கநாத பிள்ளையாவர். அவர் அடிகள் நூலொன்றுக்குச் சிறப்புக் கவி கூறியதில் ஒரு கவி அடிகள் பாடலை வியந்து கூறப்பட்டது. 'பாம்பின் கால் பாம்பறியும்' என்றபடி, புலவர்கட்குத்தான் புலமைபற்றிய அருமை யறியமுடியும்.

''அடிக்கும் முன்னேர் விதிக்கும் இன்சொற்
சுவைக்கும் ஒருகுறைவு வாராதமைத் தோர் பாட்டு
முடிக்கு முன்னே தாய்கொடுத்த சேனையெல்லாம்
வாங் குதையோ முதிரக் கல்வி
படிக்கு முன்னே கொடுத் தடுத்துக்
கேட்போர்கள் பிரமிக்கும் படிக்கும் ஒவ்வோர்
நொடிக்கும் முன்னற்கரிய கவி முருக
தாசனைப்போல நுவல்வார் யாரே?''

இப்படிப் பல.

———

# திரு. பிரஷ்னேவ் மறைவு

உலக நாடுகளுள் பெரியதொரு நாடு என மதிக்கத்தக்கதும், பொதுவுடைமைப் பூங்காவாகத் திகழ்வதுமான உருசிய நாட்டின் தலைவர் லியோனித் பிரஷ்னேவ் அவர்கள் 10—11—82 அன்று மாஸ்கோவிலுள்ள கிரெம்ளின் மாளிகையில், தமது 75 ஆவது அகவையில் திடுமென இயற்கை எய்தினர் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

ஓர் எளிய தொழிலாளர் குடும்பத்தில் தோன்றித் தொழிலாளர்களால் உருவாக்கப்பெற்ற ஒரு தொழிலாளர் நாட்டின் தலைவராகத் திகழ்ந்த இவரது மறைவு தொழிலாளர் உலகிற்கு ஒரு பேரிழப்பாகும்.

இவர் தமது அயராத உழைப்பினாலும், கொள்கைப்பற்றினாலும் படிப்படியாக உயர்ந்து 1964ல், திரு. குருஷேவுக்குப் பின் உருசியப் பொதுவுடைமைக் கட்சியின் தலைவரானார். தாம் இறப்பதற்கு நான்கு நாள்களுக்கு முன்னர், செஞ்சதுக்கத்தில் நடைபெற்ற அக்டோபர்ப் புரட்சியின் 65ஆவது ஆண்டு விழாவில் கலந்துகொண்டு உரையாற்றியபோது, 'அணு கருவிப் போர்ப் பாதையில் செல்ல வேண்டாம்'' என அமெரிக்க நாட்டை எச்சரித்தது குறிப்பிடத்தக்கது.

1961ல் இவர் இந்தியாவுக்கு வருகை தந்தபோது, இங்குள்ள நெய்வேலி அனல் மின் திட்டம், அஸ்கலேஷ்வர் எண்ணெய் வயல் ஆகியவற்றைப் பார்வையிட்டுப் பாராட்டினார்.

இவரது தொண்டினைப் பாராட்டி உருசிய அரசு பல பரிசுகளை வழங்கியுள்ளது. அவற்றுள் 1980ல் வழங்கப்பெற்ற லெனின் பரிசும் ஒன்றாகும்.

அண்மையில் நடைபெற்ற "சோவியத் சோஷலிச" ஒன்றியங்களின் ஐம்பதாவது ஆண்டுவிழாவினையொட்டி இவர் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையில் "இதுகாறும் நம்மை எதிர் நோக்கிய இடையூறுகளால் நமது கொள்கைக்கு ஊறு நேரவில்லை. இனியும் யாராலும் நமது முன்னேற்றத்தைத் தடை செய்ய இயலாது'' என்று குறிப்பிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

இந்திய நாட்டின் நல்லுறவு பேணுவதில் மிகுந்த அக்கறை கொண்டிருந்த திரு. பிரஷ்னேவின் மறைவு நம் நாட்டிற்கும் ஒரு பேரிழப்பாகும்.

———

# விநோபாபாவே மறைவு

காந்தியடிகளின் அணுக்கத் தொண்டராக இருந்தவரும், நிலக்கொடை இயக்கம் எனவோர் இயக்கங் கண்டு, அதன்மூலம் நில உரிமையாளர்கட்கும் உழவர்கட்குமிடையே போராட்டம் வலுக்காதிருக்கப் புது வழி கண்டவரும், நாட்டு விடுதலை அறப் போரில் ஈடுபட்டுச் சிறை ஒறுப்புகட்கு ஆளானவரும், பல்லுயிர் ஓம்பும் பண்பினராய்ப் பசுவதைத் தடுப்பில் நாட்டம் செலுத்திய வரும், காந்தியடிகட்குப் பின்னர் அவர்தம் பண்புநலங்கட்கு உறைவிடமாய்த் திகழ்ந்தவரும் துறவுள்ளம் படைத்தவருமான விநாயகநரஹரிபாவே என்னும் விநோபாபாவே அவர்கள் 15—11—82ல் தமது 88ஆவது அகவையில் வாழ்வின் இறுதிக் கட்டத்தை வருமுன் அறிந்து 'உற்றார்க்கு உடம்பு மிகை' என்னும் வள்ளுவர் வாக்கிற்கேற்ப, ஊணும் மருந்தும் மறுத்து இயற்கை யோடு இரண்டறக் கலந்தார் என்ற செய்தியறிந்து வருந்து கிறோம்.

மராட்டிய மாநிலத்தில் கொலாபா மாவட்டத்தைச் சேர்ந்த காசோடா என்னுஞ் சிற்றூரில் 1895ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 11 ஆம் நாளில் சாம்புராவ்பாவே என்பவருக்கும் உருக்கு மணி அம்மையாருக்கும் மைந்தராகத் தோன்றிய இவர் காந்தியத் தால் கவரப்பட்டு, நாட்டுப்பற்று மீதூரப்பெற்று, ஆங்கிலேயர் ஆட்சியில் அளிக்கப்பெற்ற பள்ளித் தேர்வுச் சான்றிதழைத் தீயிட்டுக் கொளுத்திவிட்டு, நாட்டுக்கும், குமுகாயத்திற்கும் தொண்டாற்றுவதையே தமது குறிக்கோளாகக் கொண்டார்.

1918ல் காந்தியடிகளின் நட்பைப் பெற்ற இவர் விடுதலைப் போரில் ஈடுபட்டார். 1940ல் காந்தியடிகளின் ஆணைப் படி தனிமனித அறப்போரில் ஈடுபட்டார். அதனால் சிறைப்பட்டு மூன்றாண்டு சிறை ஒறுப்புக்காளானார். அடுத்து 1942ல் ஆகஃச்டுக் கிளர்ச்சியில் ஈடுபட்டு மூன்றாண்டு சிறை வாழ்வு பெற்றார்.

இங்ஙனம் சீரிய அரசியலாளராக வாழ்ந்த இவர் காந்தியடிகள் மறைவுக்குப்பின், குமுகாயத் தொண்டிலும், சிற்றூர்ப் பொருளாதார மேம்பாட்டுப் பணிகளிலுமாகவே காலங் கழித்து வந்தார்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## குழந்தைகள் நாள் விழா

குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் 14—11—'82 அன்று மாலை, சென்னை அண்ணாசாலையிலுள்ள தேவநேயப் பாவாணர் நூலகக் கட்டிட அரங்கில், குழந்தைகள் நாள் விழாவும், குழந்தை இலக்கியப் போட்டியில் வெற்றி பெற்ற எழுத்தாளர்களுக்கு ஏ. வி. எம். அறக் கட்டளையின் பரிசுப் பதக்கங்கள் வழங்கும் விழாவும், சீரும் சிறப்புமாக நடைபெற்றன. டாக்டர் பூவண்ணன் வரவேற்புரை நிகழ்த்தினர். திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் பதிப்பாளர்களை அறிமுகம் செய்வித்தார். காவேரிச் செல்வன் நூலாசிரியர்களை அறிமுகம் செய்வித்தார். திரு. தே. பார்த்தசாரதி அவர்கள் பல பதிப்பாளர்கள் வெளியிட்டுள்ள குழந்தை நூல்களை வெளியிட்டார்கள். குழந்தை இலக்கியப் போட்டியில் வெற்றிபெற்ற எழுத்தாளர்களுக்கு ஏ. வி. எம். பரிசுப் பதக்கங்களை திரு. இ. கோவிந்தராஜுலு அவர்கள் வழங்கினர்கள். திருமதி அரசு மணிமேகலை எம்.ஏ., பி.எல்., அவர்கள் சிறப்புரை ஆற்றினர்கள். திரு. சௌந்தர் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சமய தத்துவ நிறுவனம்

தமிழ்நாட்டு அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் தத்துவ நிறுவனத்திற்கு 15 நூறாயிரம் ரூபா செலவில் அறக்கட்டளை யொன்றினை நிறுவியுள்ளது. இதன் மூலம் சைவ சித்தாந்தம், வைணவ சித்தாந்தம், வேத இந்துமதம் ஆகிய மூன்று துறைகளுக்கும் ஆராய்ச்சி அறிஞர்கள் அமர்த்தப்படுவர்.

பௌத்த சமயத்திற்கும், சமண சமயத்திற்கும், அவற்றுக்குரிய நிறுவனங்களோடு தொடர்பு கொண்டு மானியம் பெறத் தமிழ்ப் பல்கலைக் கழகம் முயன்று வருகிறது. அங்ஙனமே இசுலாமிய சமயத்திற்கும் கிறித்தவ சமயத்திற்கும் மானியம் கிடைத்தபின் பேராசிரியர்கள் அமர்த்தப் பெறுவர். அடுத்துவரும் பொங்கல் திருநாளில் இந்தத் தத்துவ நிறுவனம் காஞ்சிபுரத்தில் உருவாக்கத் திட்டமிடப்பட்டுள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது.

## பாரதி கண்ட 'கவிதைத் தலைவி' நூல் வெளியீட்டு விழா

13—11—'82 அன்று மாலை, சென்னை, இராணி சீதை மன்றத்தில், திரு. அ. வெ. சுப்பிரமணியன் அவர்கள் எழுதிய "பாரதி கண்ட கவிதைத் தலைவி" என்னும் நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது. அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி நூலினை வெளியிட்டார். நூலின் முதற் படியை 'கல்கண்டு' ஆசிரியர் திரு. லேனா தமிழ்வாணன் பெற்றுக் கொண்டார். பதிப்பாளர் வானதி திரு. ஏ. திருநாவுக்கரசு அவர்கள்

நூலாசிரியருக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர். திரு. அ. வெ. சுப்பிரமணியன் ஏற்புரை வழங்கினார். திரு. கே. பக்தவத்சலம் நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று.

## அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இந்தி !

மேல் பட்டப் படிப்பு மாணவர்கட்குரிய (Post graduates) தகுதிச் சான்றிதழ் (Diploma Courses) வழங்குவதுபற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் அறிவிப்பொன்று அண்மையில் செய்தித்தாள்களில் வெளிவந்துள்ளது. அதில் இந்தியில் செய்தி அறிவித்தல் (Reporting in Hindi) என்றொரு பாடமும் சேர்க்கப்பட்டுள்ளது. எந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இந்தி எதிர்ப்புக்கு அடிகோலியதோ அதே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில்தான் இன்று இந்தியில் தகுதி பெறுவோர்க்குச் சான்றிதழ் வழங்கப்படுகிறது என்பது சிந்திக்கற்பாலது!

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-நுள, கஉசஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, திருமுருக விசாகநம்பி | 5—00 |
| செல்வி R. சாந்தி, K. K. நகர் | 5—00 |
| கழகச் செயற்குழு உறுப்பினர் திரு. இரா. சுந்தரம் பிள்ளை அவர்கள் பெயரன் திருவளர் செல்வன் திரு. இரா. சுந்தரம், பி.இ., திருவளர் செல்வி மாலா திருமண (7—11—82) நன்கொடை | 51—00 |
| உயர்திரு. அழ. அண்ணாமலை அவர்கள் (உயர்திரு. மு. அழ. அழகப்ப செட்டியார் அவர்கள் நினைவு நன்கொடை) | 2,500—00 |

———

# மதிப்புரை

## நாவலர் பாரதியாரின் கருத்துநயங்கள்

[ஆசிரியர்: வித்துவான் நா. இராமையா பிள்ளை. வெளியீடு: பூங்குன்றன் பதிப்பகம், 6, திருவேங்கடம் தெரு, வடகோவை, கோயம்புத்தூர்-641002. பக்கம்-106. விலை ரூ. 6-50]

நூலாசிரியர் புலவர் நா. இராமையா பிள்ளை அவர்கள் நாவலர் பாரதியார்க்கு அன்பர்; அணுக்கர்; ஆர்வலர்; மாணவர்; இவற்றால் அவர் பெற்ற பேறு பெரிது; அப்பேற்றைத் தமிழுலகும் பெறவேண்டும்

என்னும் நல்லார்வப் படைப்பு, 'நாவலர் பாரதியாரின் கருத்துநயங்கள்' ஆகும்.

நாவலர் பாரதியார் வீறு நாடறிந்தது. அவர்தம் ஆய்வுத் திறம் பழமையையும் மூடத்தையும் சவட்டிச் சால்பில் நிறுத்தியது; ஆய்வில் புத்துணர்வையும் புதுத் திருப்பத்தையும் நாட்டில் நிலைப்படுத்தியது. அதன் சிதறல்கள் சிலவற்றை இந்நூலில் காணலாம்.

இலைமறை காய் என இருந்த செய்திகள் சில. அவை வெளிப்பட இந்நூலில் இடம் பெற்றுள. கருத்துகள் நாவலர் உடைமை; எழுத்து நடை ஆசிரியர்க்கு உடைமை! இவற்றின் பயன், ஆய்வின் தொடக்க நிலையாளரும் இந் நூலால் விளக்கம் பெறலாம்.

மரபியல் ஆய்வு இன்னும் விரிவுக்குரியதே எனினும், இந் நூலில் வேண்டத்தக்க அளவில் திறமான செய்திகள் உள. நாவலரின் தெளிந்த கண்ணோட்டம் நன்கு வெளிப்படுகின்றது.

நூலாசிரியர் மேற்பார்வையிலேயே நூல் அச்சிடப் பெற்றிருப்பின் நூலின் சிறப்பு மேலும் ஓங்கியிருக்கும்.

—இரா. இளங்குமரன்

## அம்பிகாபதி காதல் காப்பியம்

[ஆசிரியர் : 'அகராதிக் கலை' ஆசிரியர், இயற்கவி சுந்தரசண்முகனார், புதுச்சேரி, கிடைக்குமிடம் : திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட். 79 பிரகாசம் சாலை, சென்னை-1 விலை : ரூ. 15-00]

கம்பன் மகன் அம்பிகாபதி, சோழ மன்னனின் மகள் அமராவதியைக் காதலித்ததன் விளைவாக மன்னனின் சிற்றத்துக்காளாகிக் கொலைத் தண்டனை பெறுதலே கதையின் சாரம். இதனைச் சிறந்ததொரு காப்பியமாக வரலாற்றில் போதிய சீர்திருத்தம் செய்து, ஓரளவு பகுத்தறிவுக்குப் பொருந்துமாறு இந் நூலினை அமைத்திருக்கிறார் இந் நூலாசிரியர். அம்பிகாபதி கொலையுண்ட பின் அமராவதிக்கும், அமைச்சன் மகன் சிம்மனுக்கும் திருமண ஏற்பாடு நடைபெறுகிறது. மணக்கோலம் பூண்ட அமராவதி, அரண்மனையினின்று தப்பி வெளியேறி அம்பிகாபதியின் உடல் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் இடுகாட்டுக்கு வந்து நஞ்சுண்டு அவன் சமாதியருகிலேயே உயிர் துறக்கிறாள். இப்படி முடிகிறது கதை. காப்பியத்தின் நடை இனிமையும் எளிமையுங்கொண்டு மிளிர்கிறது. சேக்சுபியரின் உரோமியோ ஜூலியட் கதையினை நினைவூட்டுகிறது கதையின் முடிவு. காப்பியத்தின் ஊடே ஆங்காங்கே நல்ல கருத்துகளை எடுத்துரைக்கிறார். சுவையான காப்பியம்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

உ

ஓம்

# வாங்கி விட்டீர்களா............

## வாழ்வில் வெற்றியடைய வழிகள்

படித்தவர்களாலும், பத்திரிகைகளாலும் பாராட்டப் படுகின்றது.....அமோக விற்பனையாகின்றது....இது வரை இம்மாதிரியான நூல் வெளிவந்ததில்லை. ஜாதகம், எண் ஜோதிடம், கைரேகை இவை அனைத்தும் ஒன்றிற்கொன்று தொடர்பு உடையன என விளக்கப்பட்டுள்ளது.

## வெற்றிபெற்ற வாழ்க்கை

நவக்கோள்களின் நிலை, ஒன்று முதல் ஒன்பது எண்களின் ஆதிக்கம், கைரேகைகளின் அமைப்பு, உடல்நலத்துக்காக உயிர் உப்புகள் மற்றும் தொழில்வாய்ப்புகள்பற்றிப் பலதுறைச் செய்திகளை யும் ஒரே நூலில் தொகுத்தளிக்கிறார் ஆசிரியர். மேற்குறித்தவை அத்தனையும் ஒவ்வொருவர் வாழ்க்கையையும் ஒட்டிய அம்சங்களே. எனவே நூலைப் படித்து அவரவர் ஆற்றலுக்கு ஏற்றவகையில் பயன் படுத்திக்கொள்ளலாம். தவிர அவரவர் வழிபாட்டுக்கு ஏற்ற தெய்வம் - வடிவங்கள் குறித்து அறிந்துகொள்ளவும் இந்த நூல் உதவும். பல்வேறு தலைப்புகளில் போதிய விளக்கப் படங்களோடு எழுதியுள்ளார், ஜோதிடக் கலைஞர் மாரியப்பர் அடிகள். வாழ்வில் வெற்றியடைய வழிகள்' என்ற இந்த அரிய நூலின் விலை ரூ. 25-00. பதிவுத் தபாலில் ரூ. 29-00. வசந்தவல்லி பப்ளிஷிங் ஏஜன்ஸி, 16, காளிங்கராயன் தெரு, 1வது சந்து, சிமிட்டரி சாலை, சென்னை-600 021 என்ற முகவரியில் அன்பர்கள் இந்த நூலை நேரிலும் அஞ்சலிலும் பெறலாம்.

நன்றி : கலைமகள்
அக்டோபர், 1982.

---

வி பி. பி.இல் பெற ரூ. 15-00 முன் பணம் அனுப்பவேண்டும்.
வியாபாரிகளுக்குத் தக்க கழிவு உண்டு.
அனைத்து விவரங்களுக்கும் மேற்கண்ட முகவரியில்
தொடர்பு கொள்ளவும்.
எல்லாப் புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.

கீழ்க்காணும் இடத்திலும் கிடைக்கும் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79, பிரகாசம் சாலை சென்னை-1

கிளை நிலையங்கள் :

திருநெல்வேலி-6. மதுரை-1. கோயமுத்தூர்-1.
கும்பகோணம்-1. திருச்சிராப்பள்ளி-2.

# கழகப் புதிய வெளியீடுகள்

## கழக அமைச்சர் திருவரங்கர் வரலாறு

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நிறுவனரும், மறைத்திரு மறைமலையடிகளாரின் மருகரும், கல்வித்துறையின் பெருமுயற்சியாளரும், சைவ சமயக் காவலரும், பதிப்புத்துறை ஆர்வலரும், கழக ஆட்சியர் தாமரைச் செல்வரின் தமையனரு மான உயர்திரு திருவரங்கனாரின் வரலாற்று நூல் கழக இலக்கியச் செம்மல் அவர்களால் சீரியமுறையில் செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. டாக்டர் பா. நடராசன் அவர் களின் முன்னுரையுடனும், ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங் கனாரின் சீரிய ஆங்கில முன்னுரையுடனும் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய இன்றியமையாத வரலாற்று நூல் 200 பக்கங்கள். விலை ரூ. 8 00

## வையை வளம்

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

கழகவழி முன்னர் வெளிவந்த காவிரி வளம், பொருநை வளம், கெடில வளம் என்னும் ஆற்றங்கரை நாகரிகங்களின் விளக்க நூல்கள் வரிசையில் இடம்பெறும் இந்நூல் பாண்டி நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகைசெய்யும் வையை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்பங்களினின்று அகப்புறச் சான்று களுடன் ஆராய்ந்து எழுதப்பெற்றுள்ளது. வளமான செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத்தக்க நூல் விலை ரூ. 7 00

## வள்ளல் எழுவர் (நாட்டிய நாடகம்)

**ஆசிரியர் :** கலைமாமணி கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்

கடை எழுவள்ளல்களின் வரலாற்றைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில், அதே நேரத்தில் கண்ணுக்கும் கருத் துக்கும் விருந்தளிக்கும் நாட்டிய நாடகமாகவும் எழுதியுள்ளார் இந்நூலாசிரியர். கவிதைகள் இனிமையும் எளிமையும் கொண்டு படித்துச் சுவைக்கவும் நடித்துக் காணவும் ஏற்ற வகையில் அமைந்துள்ளன. பள்ளிகளிலும், கலைக் கழகங்களிலும் இருக்க வேண்டிய பயனுள்ள நாட்டிய நாடகம். விலை ரூ. 2 50

## கழக நிலையங்களில் கிடைக்கும் பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| குயப்ப பாடல்கள்—டாக்டர் ஏ. என். பெருமாள் | 16 | 00 |
| 100-ம் நீங்களே செய்யலாம்—கே. வி. எஸ். ராஜன் | 6 | 50 |
| புத்தகம் பைண்டிங் செய்வது எப்படி?—எம். பி. இனி | 15 | 00 |
| பாரதியார் பெருமை—முல்லை மூத்தையா | 7 | 00 |
| கம்பன் சொல்லும் பொருளும்—பீ. சி. சீதாபதி | 7 | 00 |
| கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் மணிவிழா மலர் | 3 | 00 |
| நினைவில் நிற்பவர்கள்—செ. து. சுந்தரவடிவேலு | 11 | 00 |
| கல்கி சிவகாமியின் சபதம் (நாடகக் காப்பியம்) —கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் | 5 | 00 |